உ

சிவமயம்

# திருத்தொண்டர்மாலை

(கதைக்குறிப்புக்களுடன்)

திருவாவடுதுறை ஆதீனம்

1957

உ

திருக்கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறைஆதீனத்து

இருபதாவது குருமகாசந்நிதானம்

# ஸ்ரீ அம்பலவாணதேசிகமூர்த்திகள்

# குருபூஜைவிழா மலர்.

துன்முகி-பங்குனி-திருவாதிரை.

7—4—57

குருபூஜை வெளியீடுகள்:

| | | |
|---|---|---|
| (1) | திருமந்திர சிந்தனை. | 1952 |
| (2) | திருஞானசம்பந்தர் பிள்ளைத்தமிழ். | 1953 |
| (3) | ஸ்ரீ கச்சியப்பமுனிவர் பிரபந்தங்கள் II. | 1954 |
| (4) | க்ஷேத்திரக்கோவைப்பிள்ளைத்தமிழ் | 1955 |
| (5) | இரத்தினசபாபதிமாலை. | 1956 |

சிவபரிபூரணம் — திருவிடைமருதூர்

விகிருதி — பங்குனி — திருவாதிரை. 1951,

வெளியீடு எண்: 108



உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# திருத்தொண்டர்மாலை

திருக்கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறைஆதீனத்து
இருபத்தொன்ருவது குருமகாசந்நிதானம்
**ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிகசுவாமிகள்**
கட்டளையிட்டருளியபடி

திருவாவடுதுறை ஆதீனவித்துவான்
**த. ச. மீனட்சிசுந்தரம்பிள்ளையால்**
பரிசோதித்து நூதனமாக எழுதிய நாயன்மார்கதைக்குறிப்பு
முகவுரை முதலியவற்றுடன் பதிப்பிக்கப்பெற்றது.

திருவாவடுதுறை

1957.



திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்
இருபத்தோன்ருவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள்

உ

சிவமயம்

# முகவுரை

திருத்தொண்டர்மாலை என்னும் இந்நூல் திருத்தொண்டர்களது மாலை என விரியும்; இது ஆறும் வேற்றுமைத் தொகை. திருத்தொண்டர்களைப்பற்றியமாலை என இரண்டன் உருபும் பயனும் உடன் தொக்கதொகையாகக்கொண்டு உரைப்பினுமாம். இச்சிறுநூல் பாயிரம்-3, நூல்-100 ஆக 103 நேரிசை வெண்பாக்களால் ஆக்கப்பட்டுள்ளது. மாலை - வரிசை. மலர்களை வரிசை வரிசையாக வைத்துத் தொடுக்கும் மாலைபோன்று, செய்யுட்களை வரிசையாக வைத்து யாக்கப்பட்டமையின் இது மாலை என்னும் பெயர் பெற்றது.

திருத்தொண்டர் ஆவார்: விபூதி உருத்திராக்கம் என்னும் சிவ சின்னங்களைத் தரித்தவர்களும், திருவைந்தெழுத்தை உச்சரிப்பவர்களும், ஓடும் செம்பொனும் ஒக்க நோக்குபவர்களும், நல்வினையால் வரும் இன்பத்தினும் தீவினையால் வரும் துன்பத்தினும் சமபுத்தி பண்ணுபவர்களும், பசுபதியாகிய சிவபெருமானுடைய திருவடிகளில் வைத்த மெய்யன்பு ஒன்றனையே உயர்வு ஒப்பு இல்லாத பெருஞ்செல்வம் எனக்கொண்டு இடையறுது ஒழுகும் தைலதாரைபோல இயற்கைத்தாகிய அவ்வன்பால் விழுங்கப்பட்டவர்களும், சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் வீட்டுநெறி நான்கின் வழியே நிற்பவர்களுமாகிய

அடியவர்கள் திருத்தொண்டர் என்று சிறப்பித்துச் சொல்லப்படுவார்கள்.

சைவசமயகுரவருள் ஒருவராகிய சுந்தரமூர்த்தி நாயனுர் திருவாரூரிலே திருத்தொண்டர் கூட்டத்தைத் தரிசித்து, திருத்தொண்டத்தொகை என்னும் முதனூலை அருளிச்செய்தனர். இதனைப்பாடுதற்கு அடியெடுத்துக் கொடுத்தருளினவர் வன்மீக நாதராகிய சிவபெருமானே. சுந்தரமூர்த்திநாயனுர் அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவராய்த் திரு அவதாரம் செய்து, மற்றை நாயன்மாரைத் துதித்துத் திருத்தொண்டத்தொகை பாடியருளினர்.

அறுபத்து மூன்று நாயன்மார்களுடைய சரித்திரத்தைத் திருவந்தாதியாகப் பாடியருளினர் நம்பியாண்டார் நம்பி என்பவர். அவர் திருநாரையூரில் எழுந்தருளியிருக்கும் பொல்லாப்பிள்ளையாரின் திருவருளைப் பெற்றவர்.

அறுபத்துமூன்று நாயன்மார்களுடைய சரித்திரத்தைப் பெரியபுராணமாகச் செய்யும்பொருட்டுக் கனகசபையிலே சேக்கிழார் நாயனுருக்கு அடியெடுத்துக்கொடுத்தருளினவர் சபாநாயகராகிய திருச்சிற்றம்பலமுடையவரே. பெரியபுராணம் திருத்தொண்டர் புராணம் எனவே கூறப்படும்.

இத் திருத்தொண்டர் புராணம் திருத்தொண்டர்களுடைய அடிமைத் திறத்தையும், அவர்களுக்குச் சிவபெருமான் அருளிய திருவருட்டிறத்தையும் விரித்துச் சொல்வது. திருத்தொண்டர்மாலையாகிய இந்நூல் திருத்தொண்டத்தொகையில் அருளிச்

செய்த பதினொரு திருப்பாட்டின் முறையிலே வைத்துத் திருத்தொண்டர் அடிமைத்திறம் முன்இரண்டு அடிகளிலும் பொருந்தப் பின்இரண்டு அடிகளிலே அவைகட்கு ஏற்ற திருக்குறட் பாக்களை அமைத்து நேரிசை வெண்பாக்களால் இயற்றப்பெற்றுள்ளது.

இந்நூலை இயற்றியவர் குமாரபாரதி என்பவர். அவரைப்பற்றிய வேறு செய்திகள் ஒன்றும் கிடைக்கவில்லை. எனினும், திருத்தொண்டர் பெரியபுராணத்திலும், திருக்குறளிலும் மிக்க அன்பு கொண்டொழுகியவர் எனத்தெரிகிறது. நூலாசிரியர் குமாரபாரதி என்பது,

"பன்னு கலைக்குமர பாரதியாம் மாமுனிவன்
சொன்ன தமிழ்மாலை துதிப்பதற்கு—மின்னுதலை
ஆயிர நா வாயிரத்தோன் அன்றி எவர்கொலோ
மாயிருஞா லத்தின் மகிழ்ந்து."

என்னும் சிறப்புப் பாயிரச் செய்யுளால் அறியப்படுகின்றது.

திருக்குறட்பாக்களைப் பின் இரண்டு அடிகளில் அமைத்துப் பாடிய சிறு நூல்கள் பல. அவை நம் தெய்வச் செந்தமிழ்நாட்டு மக்கள் சிறுபிராயத்திலேயே கற்றுணர்ந்து வல்லராதற் பொருட்டுப் பல பெரியோர்களால் வெண்பாயாப்பிலே பாடப்பட்டன, அவற்றுள், இத்திருவாவடுதுறை ஆதீனத்துத் திராவிடமாபாடிய கர்த்தராகிய ஸ்ரீமாதவச் சிவஞான யோகிகள் அருளிச்செய்த 'சோமேசர் முதுமொழி வெண்பா' முதற்கண்வைத்துப் போற்றப்படுவது.

இவ்வாதீனத்திலே முறையாகத் தமிழ்பயில்வோருக்குத் தொடக்கத்திலே பயிலும் நூலாக அமைந்தது இது. இவ்வகையைச் சார்ந்த மற்ற நூல்கள்: சிவ சிவவெண்பா, இரங்கேச வெண்பா, தினகரவெண்பா, முருகேசர் முதுநெறி வெண்பா, திருக்குறட் குமரேச வெண்பா, திருப்புல்லாணி மாலை, வள்ளுவர்நேரிசை, முதுமொழிமேல்வைப்பு, சினேந்திரவெண்பாஎன்பன. ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் அருளிச்செய்த நீதிநெறி விளக்கம் திருக்குறளின் பிழிவு என்றே துணிந்து கூறலாம்.

இனி, திருத்தொண்டத் தொகையின் முறையையே பின்பற்றி நாயன்மார் வரலாற்ற்ற ஒவ்வொரு திருப்பாட்டிலும் அவர் அருளிச் செய்தபடியே கூறி, "ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே" என்று அருளியதற்கு ஏற்பச் சுந்தரமூர்த்தி நாயனுருடைய வரலாற்றுப்பகுதி அங்கங்கே கூறப்பட்டிருக்கின்றன.

சுந்தரமூர்த்தி சுவாமிகள்: 8, 16, 23, 35, 46, 54, 63, 69, 75, 83, 92, 93, 94, 95, 96, 97, 98. 99, 100, ஆக 19 வெண்பாக்கள்.

திருநாவுக்கரசு சுவாமிகள்: 24, 25, 26, 27, 28.

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்: 36, 37, 38. 39, 40.

சேரமான் பெருமாள் நாயனுர்: 50, 51.

கோச்செங்கட்சோழ நாயனுர்: 87, 88.

தனியடியார் அறுபத்து மூவருள் மேலேகூறிய ஐவர்கட்கு உரியனவாக 33 வெண்பாக்களும், மற்றை அடியார்கட்கு 67 வெண்பாக்களுமாக உள்ளன: இவ்

வெண்பாக்களுள் தொகையடியார்கட்கு உரியன 9 வெண்பாக்களாம்.

தனியடியார் அறுபத்து மூவராவார்:- ஆதி சைவர்-4, பிராமணர்-12, மாமாத்திரர்-1, அரசர்-6, குறுநிலமன்னர்-5, வணிகர்-5, வேளாளர்-13, இடையர், குயவர், பாணர், பரதவர், வேடர், சான்றார், சாலியர், செக்கார், ஏகாலியர், புலையர் இவருள் ஒவ்வொருவர்; மரபறியாதவர்-6 ஆக 63.

தொகையடியார்களுள் முப்பொழுதும் திருமேனி தீண்டுவார்-1, தில்லைவாழந்தணர்-1, மரபறியாதவர்-7 ஆக 9.

குருவருளால் முத்திபெற்றவர் – 12, சிவலிங்கத்தால் முத்திபெற்றவர் 30, சிவனடியாரை வழிபட்டு முத்திபெற்றவர் - 19.

இதனை அச்சிட்டு மெய்யன்பர் பொருட்டு இக் குருபூசை விழாவிலே உதவுக என இருபத்தோராவது குருமஹாசந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக சுவாமிகள் கட்டளையிட்டருளியபடி திருத்தொண்டர் கதைக்குறிப்புக்களும், குறட்பாக்களுக்குப் பரிமேலழகர் உரைப்பகுதியும் இதனுட் சேர்க்கப்பட்டுள்ளன.

குற்றம் உளதாயின் உலகம் பொறுத்தருள்க.

இங்ஙனம்,

சித்தாந்தசைவமணி—

திருவாவடுதுறை
6—4—1957.

த. ச. மீனாட்சிசுந்தரம்பிள்ளை,

திருவாவடுதுறை ஆதீனவித்துவான்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

## குருமரபுவாழ்த்து

" கயிலாய பரம்பரையிற் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பானு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ "

திருச்சிற்றம்பலம்

—ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள்.

உ

சிவமயம்

சுந்தரமூர்த்திசுவாமிகள்

அருளிச்செய்த

# திருத்தொண்டத்தொகை

பண் - கொல்லிக்கௌவாணம்.

திருச்சிற்றம்பலம்

தில்லைவா ழந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்
திருநீல கண்டத்துக் குயவனார்க் கடியேன்
இல்லையே என்னாத இயற்பகைக்கும் அடியேன்
இளையான்றன் குடிமாறன் அடியார்க்கும் அடியேன்
வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக் கடியேன்
விரிபொழில்சூழ் குன்றையார் விறன்மிண்டற்
[கடியேன்
அல்லிமென் முல்லையந்தார் அமர்நீதிக் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 1

இலைமலிந்த வேல்நம்பி எறிபத்தற் கடியேன்
ஏனாதி நாதன்றன் அடியார்க்கும் அடியேன்
கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பற் கடியேன்
கடவூரிற் கலயன்றன் அடியார்க்கும் அடியேன்
மலைமலிந்த தோள்வள்ளல் மானக்கஞ் சாறன்
எஞ்சாத வாட்டாயன் அடியார்க்கும் அடியேன்
அலைமலிந்த புனல்மங்கை ஆனாயற் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 2

மும்மையா லுலகாண்ட மூர்த்திக்கும் அடியேன்
முருகனுக்கும் உருத்திர பசுபதிக்கும் அடியேன்
செம்மையே திருநாளைப் போவார்க்கும் அடியேன்
திருக்குறிப்புத்தொண்டர்தம் அடியார்க்குமடியேன்
மெய்ம்மையே திருமேனி வழிபடா நிற்க
வெகுண்டெழுந்த தாதையை மழுவினால் எறிந்த
அம்மையான் அடிச்சண்டிப் பெருமானுக் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 3

திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட
திருநாவுக் கரையன்றன் அடியார்க்கும் அடியேன்
பெருநம்பி குலச்சிறைதன் அடியார்க்கும் அடியேன்
பெருமிழலைக் குறும்பர்க்கும் பேயார்க்கும் அடியேன்
ஒருநம்பி அப்பூதி யடியார்க்கும் அடியேன்
ஒலிபுனல்சூழ் சாத்தமங்கை நீலநக்கற் கடியேன்
அருநம்பி நமிநந்தி யடியார்க்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 4

வம்பறா வரிவண்டு மணம்நாற மலரும்
மதுமலர்நற் கொன்றையான் அடியலாற் பேணா
எம்பிரான் சம்பந்தன் அடியார்க்கும் அடியேன்
ஏயர்கோன் கலிக்காமன் அடியார்க்கும் அடியேன்
நம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன்
நாட்டமிகு தண்டிக்கும் மூர்க்கற்கும் அடியேன்
அம்பரான் சோமாசி மாறனுக்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 5

வார்கொண்ட வனமுலையாள் உமைபங்கன் கழலே
மறவாது கல்லெறிந்த சாக்கியற்கும் அடியேன்
சீர்கொண்ட புகழ்வள்ளல் சிறப்புலிக்கும் அடியேன்
செங்காட்டங் குடிமேய சிறுதொண்டற் கடியேன்

கார்கொண்டகொடைக்கழறிற் றறிவாற்கும்அடியேன்
கடற்காழிக் கணநாதன் அடியார்க்கும் அடியேன்
ஆர்கொண்ட வேற்கூற்றன் களந்தைக்கோ னடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 6

பொய்யடிமை யில்லாத புலவர்க்கும் அடியேன்
பொழிற்கருவூர்த் துஞ்சிய புகழ்ச்சோழற் கடியேன்
மெய்யடியான் நரசிங்க முனையரையற் கடியேன்
விரிதிரைசூழ் கடல்நாகை அதிபத்தற் கடியேன்
கைதடிந்த வரிசிலையான் கலிக்கம்பன் கலியன்
கழற்சத்தி வரிஞ்சையர்கோன்அடியார்க்குமடியேன்
ஐயடிகள் காடவர்கோன் அடியார்க்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 7

கறைக்கண்டன் கழலடியே காப்புக்கொண் டிருந்த
கணம்புல்ல நம்பிக்குங் காரிக்கும் அடியேன்
நிறைக்கொண்ட சிந்தையால் நெல்வேலி வென்ற
நின்றசீர் நெடுமாறன் அடியார்க்கும் அடியேன்
துறைக்கொண்ட செம்பவளம் இருளகற்றுஞ்சோதித்
தொன்மயிலை வாயிலான் அடியார்க்கும் அடியேன்
அறைக்கொண்ட வேல்நம்பி முனையடுவாற் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 8

கடல்சூழ்ந்த உலகெலாம் காக்கின்ற பெருமான்
காடவர்கோன்கழற்சிங்கன் அடியார்க்கும்அடியேன்
மடல்சூழ்ந்த தார்நம்பி இடங்கழிக்கும் தஞ்சை
மன்னவனாம்செருத்துணை தன்னடியார்க்குமடியேன்

புடைசூழ்ந்த புலியதள்மேல் அரவாட ஆடி
பொன்னடிக்கே மனம்வைத்த புகழ்த்துணைக்கும்
[அடியேன்
அடல்சூழ்ந்த வேல்நம்பி கோட்புலிக்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 9

பத்தராய்ப் பணிவார்கள் எல்லார்க்கும் அடியேன்
பரமனையே பாடுவார் அடியார்க்கும் அடியேன்
சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கும் அடியேன்
திருவாரூர்ப் பிறந்தார்கள் எல்லார்க்கும் அடியேன்
முப்போதும் திருமேனி தீண்டுவார்க் கடியேன்
முழுநீறு பூசிய முனிவர்க்கும் அடியேன்
அப்பாலும் அடிச்சார்ந்த அடியார்க்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 10

மன்னியசீர் மறைநாவன் நின்றவூர்ப் பூசல்
வரிவளையாள் மானிக்கும் நேசனுக்கும் அடியேன்
தென்னவனாய் உலகாண்ட செங்கணாற் கடியேன்
திருநீல கண்டத்துப் பாணனார்க் கடியேன்
என்னவனாம் அரனடியே அடைந்திட்ட சடையன்
இசைஞானி காதலன் திருநாவ லூர்க்கோன்
அன்னவனாம் ஆரூரன் அடிமைகேட் டுவப்பார்
ஆரூரில் அம்மானுக் கன்பரா வாரே. 11

திருச்சிற்றம்பலம்.

திருத்தொண்டத்தொகை முற்றிற்று.

உ
சிவமயம்

திருவாவடுதுறைஆதீனத்துத் திராவிடமாபாடிய
கர்த்தராகிய

## ஸ்ரீ மாதவச் சிவஞானயோகிகள்

அருளிச்செய்த

# திருத்தொண்டர்திருநாமக்கோவை

மெய்யன்பர் நாமமெல்லாம் வெவ்வேறு போற்றிடஐங்
கையன் திருவடியே காப்பு.

தில்லைவா ழந்தணர்கள் சீர்நீல கண்டனார்
இல்லை அளித்த இயற்பகையார் - தொல்லை
இளையான் குடிமாறர் மெய்ப்பொருளார் என்றும்
இளையா விறன்மிண்டர் இன்பம் - அளவுமமர்
நீதி எறிபத்தர் நீண்டபுகழ் ஏனாதி
நாதர்திருக் கண்ணப்பர் நற்கலயர் - மேதகுசீர்
மானக்கஞ் சாறரரி வாட்டாயர் ஆனாயர்
ஞானத் திருமூர்த்தி நாயனார் - மேன்மை
முருகர் பசுபதியார் முன்னாளைப் போவார்
துரிசில் திருக்குறிப்புத் தொண்டர் - மருவுமறைச்
சண்டீசர் வாகீசர் தக்க குலச்சிறையார்
கொண்ட மிழலைக் குறும்பனார் - தொண்டுசெயும்
நீள்காரைக் காலம்மை அப்பூதி நீலநக்கர்
மூளும் நமிநந்தி முத்தமிழை - ஆளும்
திருஞான சம்பந்தர் செய்யகலிக் காமர்
அருள்மூலர் தண்டி யடிகள் - வருமூர்க்கர்
சோமாசி மாறனார் சாக்கியனார் சூழாக்கூர்
நாமார் சிறப்புலியார் நற்றொண்டின் - ஏமச்

சிறுத்தொண்டர் சேரமான் செய்யகண நாதர்
விறற்களந்தைக் கூற்றுவனுர் விஞ்சைத் - திறத்து
பொய்யடிமை யில்லாப் புலவர் புகழ்ச்சோழர் [மிகும்
மொய்கொள் நரசிங்க முனையரையர் - ஐயரதி
பத்தர்கலிக் கம்பர் கலியர் பகர்சத்தி
கைத்தபுலன் ஐயடிகள் காடவர்கோன் - மொய்த்த
புல்லனுர் காரிநெடு மாறர்புகழ் வாயிலார் [கணம்
நல்ல முனையடுவார் நாயனுர் - மல்குகழற்
சிங்கர் இடங்கழியார் தஞ்சைச் செருத்துணையார்
கொங்கார் புகழ்த்துணையார் கோட்புலியார் - [அங்கணற்குப்
பத்தராய்த் தாழ்வார் பரமனையே பாடுவார்
சித்தம் சிவன்பாலே சேர்த்துள்ளார் - நித்தமும்
முத்திநெறி காட்டும் முதல்வர் முழுதுணர்ந்தோர்
பித்தனுறை ஆரூர்ப் பிறந்தார்கள் - அத்தனையே
முப்போதும் தீண்டுவார் முழுநீறு பூசுவார்
அப்பாலும் ஈச னடிச்சார்ந்தார் - மெய்ப்பூசல்
மானியார் நேசனுர் வாழ்செங்கட் சோழனுர்
பான்மையார் நீலகண்டப் பாணனுர் - மேன்மைச்
சடையரிசை ஞானியவர் தம்மைஎல்லாம் சேர்த்துத்
தொடையாகப் பாடியவன் ருெண்டர் - அடியிணைகள்
சிந்தனைசெய் திந்தத் திருநாமக் கோவைதனை
மந்திரமாக் கொண்டு மயிர்சிலிர்த்து - நைந்துருகி
மெய்யன்பால் என்றும் விளம்பப் பெறுவார்கள்
கைதவமும் புல்லறிவும் கற்பனையும் - மையலுந்தீர்ந்
தத்துவிதா னந்த அகண்டபரி பூரணத்தின்
நித்தியமா வாழ்வார் நிசம்.

திருத்தொண்டர் திருநாமக்கோவை முற்றிற்று.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருத்தொண்டர்மாலை

## பாயிரம்

தூண்டா விளக்கருள்செய் தொண்டத் தொகையினம்பி
யாண்டாரந் தாதிமுறை அன்பானேர்க் - கீண்டியன்ற
வள்ளுவர்நூல் வெண்பா வகுத்துரைப்பன் நாரையூர்ப்
பிள்ளையா ரைத்தொழுது பின். (1)

இதன்பொருள்: 'தூண்டாவிளக்கு' ஆகிய சுந்தர மூர்த்திசுவாமிகள் அருளிச்செய்த திருத்தொண்டத் தொகையினை முதனூலாகக்கொண்டு நம்பியாண்டார் நம்பிகள் அருளிச்செய்த திருத்தொண்டர் திருவந்தாதி யிலே கூறப்பட்டிருக்கின்ற முறைமைப்படி மெய் யன்புடைய அடியார்களைச்சிந்திக்கும்படிக்கு இவ்வுல கத்திலே யாவரானும் போற்றப்படும் திருக்குறள் வெண்பாக்களில் ஒல்லும்வகை தெரிந்தெடுத்துத் திருநாரையூரில் எழுந்தருளியுள்ள பொல்லாப்பிள்ளை யாரை முற்பட வணங்கிப் பின்பு வெண்பா யாப்பி னுலே திருத்தொண்டர்மாலை என்னும் இந்த நூலை வகுத்துச்சொல்லுவேன் யான் என்றவாறு.

தூண்டாவிளக்கு என்பது குறிப்புமொழி: சுந்தரர் என்றபடி.

தூயதிருத் தொண்டத் தொகைதந்து சுந்தரர்தாம்
மாயிருஞா லத்தோரை வாழ்வித்தார் - ஆயதெவன்
கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்
டென்னாற்றுங் கொல்லோ உலகு. (2)

பரிசுத்தமாகிய திருத்தொண்டத்தொகை என்னும் தேவாரத் திருப்பதிகத்தினைத் திருவாரூரிலே வன்மீக நாதர் "தில்லைவா ழந்தணர்த மடியார்க்கு மடியேன்" என்று அடியெடுத்துக் கொடுக்க, பதினொரு திருப் பாட்டினாலே முற்றுவித்துச் சமயகுரவர்கள் நால்வருள் ஒருவராகிய சுந்தரமூர்த்திநாயனார் மிகப் பெரிய உலகத்திலுள்ள ஆன்மாக்கள் உய்யும்படி செய்தருளினார்; அத்தகைய பரமோபகாரியாகிய அந்த ஆசாரியருக்கு நாம் செய்யக்கடவதாகிய பிரதி உபகாரம் யாதுளது? (அங்ஙனம் வாழ்வித்ததனால் அவர்க்காகிய பயன்தான் என்னை? என்றபடி). தமக்கு நீர் உதவுகின்ற மேகங்களினிடத்து உயிர்கள் என்ன கைம்மாறு செய்யாநின்றன? ஆகலான், அம்மேகங்கள் போல்வார் செய்யும் ஒப்புரவுகளும் கைம்மாறு நோக்குவன அல்ல என்றவாறு.

கடப்பாடு - முறையறிந்து செய்யப்படும் உபகாரம்; கடமை. மாரி - மேகம்.

*குறள் அதி - 22, ஒப்புரவறிதல் 1.*

மைவைத்த கண்டர் மறைவாக்கி னாற்புகழ்ந்த
சைவத் தலைவரன்பு சாற்றுதல்யான்—கைவைத்(து)
அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளல். (3)

இச்செய்யுள் அவையடக்கம் கூறுதல் நுதலிற்று.

கரிய நஞ்சைக் கண்டத்திலேகொண்ட சிவபெருமான், வேத சிவாகமங்களை ஆன்மாக்கள் உய்யும் பொருட்டு அருளிச்செய்த தமது திருவாக்கினலே, தம்முடைய திருத்தொண்டர்களது அடிமைத் திறத்தைப் பாடும்பொருட்டு அநுக்கிரகம் செய்தருளிய சைவ மெய்யடியார்களுடைய பத்திநிலையை யான் சொல்லத்துணிந்த தன்மையானது. வட்டாடுதற்கு வகுத்த தானத்தை அமைத்துக் கொள்ளாமல் வட்டாடினுற்போலும், தான் அறியவேண்டுவன எல்லாவற்றையும் அறிந்து கொள்ளுதற் கேதுவாகிய நூல்களைக் கல்லாது ஒருவன் அவையின்கண்ணே ஒன்றனைச் சொல்லுதல் என்றவாறு.

எனவே, சொல்லும் பொருளும் நெறிப்படா என்பதாயிற்று.

சைவத்தலைவர் - அறுபத்துமூவர் முதலியோர். வட்டாடல் - சூதாடுகருவியை உருட்டல். கோட்டி கொளல் - அவையின்கண் ஒன்றினைச் சொல்லுதல். கோட்டி என்பது இடவாகு பெயராய்ச் சொல்லை உணர்த்துதலின், கொளல் என்பது இலக்கணையாய்ச் சொல்லுதல் ஆயிற்று.

*குறள் அதி - 41, கல்லாமை 1.*

பாயிரம் முற்றும்

# நூல்

## தில்லைவாழந்தணர்

பூவா யிரம்பேர் புகழ்கூத்த ரைத்தில்லை
மூவா யிரம்பேர் முதலெனக்கொண் - டோவார்
அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு. (

நிலவுலகத்திலே மானிடர்கள், "பேராயிரம் பரவி வானோர் ஏத்தும் பெம்மானை" ஆயிரம் திருநாமங்களையும் சொல்லிப் புகழ்கின்ற கூத்தப்பிரானை, தில்லை வாழந்தணர்கள் மூவாயிரம்பேர்களும் தமக்கு முதல்வ ரென்று கொண்டு போற்றிப்புகழ்ந்து பூசை செய்வதினின்றும் நீங்கமாட்டார்கள். எழுத்துக்களெல்லாம் அகரத்தை முதலாகவுடையன: (அதுபோல) உலகமானது ஆதிபகவனாகிய முதலையுடைத்து என்றவாறு.

ஆதி பகவன் என்பது ஆதிசத்தியை உடைய பகவன் என்னும்பொருட்டு; இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்கதொகை. வடநூல் முடிபாகலின் இயல்பாயிற்று. எடுத்துக்காட்டுவமை இது. "சிவம் எனும்பொருளும் ஆதிசத்தியொடுசேரின் எத்தொழிலும் செயவல்லதாம்" எனப் பிறர் கூறுமாறும் அறிக. அகரத்திற்கும் ஆதிபகவற்கும் 'தலைமையே பொதுமை' என்பது பரிமேலழகர் கருத்து. அகரத்திற்கும் ஆதிபகவற்கும் 'நிறைவே பொதுமை' என்பது நச்சினார்க்கினியர் கருத்து; உரைப்பகுதிகள் நோக்கியுணர்க.

"ஆயிரம் திருநாமம் பாடி நாம் தெள்ளேணம் கொட்டாமோ" என்றருளினர் மாணிக்கவாசகசுவாமிகளும். பூ - உலகம்; ஈண்டு மக்களை உணர்த்திற்று. ஓவார் - நீங்கார்.

*குறள் அதி - 1, கடவுள்வாழ்த்து 1.*

## திருநீலகண்டநாயனர்

ஆலகன்டர் ஆணைகொண்டில் லாளெதிர்செல் லாதுதிரு
நீலகண்டர் ஐம்பொறிமா நீக்கினர் - மேலாம்
உரனென்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்
வரனென்னும் வைப்புக்கோர் வித்து. (2)

இது ஐம்புலனடக்கம் அடியார்கட்கு அவசியம் எனக் கூறுகின்றது.

கல்லால விருட்சத்தின் நிழலிலே எழுந்தருளியுள்ள சிவபிரானுடைய 'திருநீலகண்டத்தின் ஆணை' யால் மனைவியாரைத் தொடாமல் நீங்கி, திருநீலகண்ட நாயனர் பஞ்சேந்திரியங்களாகிய யானைகளை ஓட்டிக் கீர்த்திபெற்ருர். மேம்பட்ட அறிவு என்னும் அங்குசத்தால் ஒப்பற்ற பொறிகளாகிய யானைகள் ஐந்தினையும் தத்தம் புலன்கள்மேற் செல்லாமல் பாதுகாக்கும் வன்மையினையுடையோன் எல்லாநிலத்தினும் மிக்கதென்று சொல்லப்படும் வீட்டுநிலத்துக்கு ஓர் வித்தாம் என்றவாறு.

ஆல் அகண்டர். ஆலகண்டர் என இரட்டுறமொழிக.

மா - யானை. ஐந்து என்றது மெய் வாய் கண் மூக்குச் செவி என்ற பஞ்சேந்திரியங்களை. உரன் - திண்மை. ஈண்டு அறிவின்திண்மை என்க. தோட்டி - அங்குசம். வரன் - சிரேட்டம். வைப்பு - நிலம்.

*குறள் அதி - 3, நீத்தார்பெருமை 4.*

## இயற்பகைநாயனார்

*மயற்பகையுள் உள்ளுவப்ப மாதவர்க்கில் லாளை*
*இயற்பகையி கழ்ந்தெள்ளா தீந்தான் - செயற்பால்*
*இகழ்ந்தெள்ளா தீவாரைக் காணின் மகிழ்ந்துள்ளம்*
*உள்ளுள் உவப்ப துடைத்து.* (3)

இது மனம் கோணுமற் கொடுப்பதே கொடை என்கிறது.

மகாதவசியைப்போல ஓர் அந்தணர் வடிவங் கொண்டுவந்த மாதவர்க்கு அவருடைய நிராசையே வடிவமான உள்ளம் களிப்புற அவர் விரும்பியவாறே தம்முடைய மனைவியாரை எவ்வளவும் தாமதமின்றி மனமகிழ்ச்சியோடு கொடுத்ததுடன் அமையாமல், மற்றும் எதிர்த்துவந்த சுற்றத்தாரையும் வாளுக்கிரை யாக்கிச் சிவபிரான் திருவருளால் வீட்டின்பத்தைப் பெற்று இயற்பகைநாயனார் வாழ்ந்திருந்தார்; தம்மை அவமதித்து இழிவு சொல்லாது பொருள் கொடுப் பாரைக்கண்டால், அவ்விரப்பாரது உள்ளம் மகிழ்ந்து உள்ளுள்ளே உவக்குந்தன்மையுடைத்து என்றவாறு.

'இகழ்ந்து எள்ளாது எனவே, நன்கு மதித்தலும் இனியவை கூறலும் பெறுதும்' என்பர் பரிமேலழகர்.

மயற்பகை - மருட்குப்பகை, அதாவது மெய்ப்பொருளல்லனவற்றை மெய்ப்பொருள் என்று உணருகின்ற மருளுக்குப் பகை என்க.

மயற்பகை (யாகிற) மாதவர்க்கு உள்ளுள் உவப்ப இகழ்ந்து எள்ளாது இல்லாளை ஈந்தான் என்று ஒட்டிக்கொள்க.

குறள் அதி - 106, இரவு 7.

## இளையான்குடிமாறநாயனார்

*உய்வித் தவனடியார்க் கோரிருளில் போய்மாறன்*
*செய்வித்தும் வாரியனம் செய்தானே - மெய்வருந்தி*
*வித்தும் இடல்வேண்டும் கொல்லோ விருந்தோம்பி*
*மிச்சில் மிசைவான் புலம்.* (4)

உயிர்க்கு உயிராயிருந்து ஆன்மாக்களை இரட்சித்தருளும் சிவபெருமான், அடியார்வேடம்பூண்டு ஒரு நாள் நள்ளிரவில் அன்றுமுழுவதும் உணவு இன்றி வாட்டமுற்றவரைப்போலத் தளர்ந்து சென்று, நித்திரைசெய்யும் இளையான்குடிமாறநாயனாரை எழுப்ப, அந்த நாயனார் எழுந்து அன்புடனே உபசரித்து அமுதூட்டும் அவாவினராய் அன்று தமது வயலில் விதைத்திருந்த முளைவிதையை வாரிவந்தும் தோட்டத்தில் குழி நிரம்பாத முளைக்கீரையைப் பறித்து வந்தும் மனைவியாரிடம் கொடுக்க, அவர் விரைந்து பாகம் செய்து சிவனடியாரை அழைக்க அடியார் சோதி வடிவினராய்த் தோன்றித் தமது திருவடியிற் சேர்த்து அருள் செய்தார். சரீரவருத்தமுற்று, முன்னே விருந்தினரை உபசரித்து ஊட்டிப் பின்பு மிக்கதனைத் தான்

உண்ணுவோனது விளைபுலத்துக்கு வித்து இடுதலும் வேண்டுமோ? வேண்டா; அது தானே விளையும் என்றவாறு.

உய்வித்தவன் - சிவபெருமான். மாறன் - இளையான்குடிமாறநாயனார். மாறன் - காமக் குரோதாதிகட்குப் பகைவன் என்றபடி. செய் - வயல். அனம் - அன்னம், சோறு. மிச்சில் - மிகுதி, சேடம். மிசைவான் - உண்பான்.

இல்லறத்தார் எவ்வகையானும் விருந்தோம்புதல் கடமை என்பதாம்.

*குறள் அதி - 9, விருந்தோம்பல் 5.*

## மெய்ப்பொருள்நாயனார்

*பொய்ப்பொருள்மாற் றான்புரிந்த பொய்த்தவவே*
*[டம்பொருளாய்*
*மெய்ப்பொருளார் கண்ட விதம்தானே - மெய்ப்பொருள்*
*எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்*
*மெய்ப்பொருள் காண்ப தறிவு.* (5)

பொய்ம்மையாகிய உலக வாழ்க்கையை மெய் எனக்கொண்டு அதனை விரும்பிய சத்துருவாகிய முத்திநாதன் என்பவன் சிவனடியார்போல வேடம் பூண்டு வந்து, தன்னை வணங்கிய மெய்ப்பொருள் நாயனாரை, தன்கையிலே புத்தகக் கவளிகை போல மறைத்துவைத்திருந்த வாளினால் குத்தியகாலத்திலும் சிவவேடமே மெய்ப்பொருள் என்னும் உறுதியுடன்

வணங்கி, அவனுக்கு ஓர் இடையூறும் நேரிடாமல் புறம்போகவிடுத்த செய்தி தெரிந்து சிவபதமடைந்த சேதிநாட்டு அரசராகிய மெய்ப்பொருள் நாயனர் செய்த அருஞ்செயலே மெய்ம்மையாம். யாதொரு பொருள் யாதோர் இயல்பிற்றாய்த் தோன்றினும் அத் தோன்றியவற்றைக்கொண்டு ஒழியாது, அப்பொரு ளின்கண் நின்று மெய்யாகிய பொருளைக் காண்பதே மெய்யுணர்வு என்பதாம்.

பொருளாய் - மெய்த்தவவேடமாய். மாற்றான் - பகைவன்; என்றது முத்திநாதனை.

*குறள் அதி - 36, மெய்யுணர்தல் 5.*

## விறன்மிண்டநாயனர்

*அறன்மண்டு சுந்தரனை ஆரூர் அரனை*
*விறன்மிண்டர் தாமே வெகுண்டார் - மறமன்(று)*
*உறாஅ தவர்போற் சொலினும் செறாஅர்சொல்*
*ஒல்லை உணரப் படும்.* (6)

அடியார்களை முதலில் வணங்காது திரு ஆரூர்ப் பூங்கோயிலிற்சென்ற சிவதருமம்நிரம்பிய சுந்தரமூர்த்தி சுவாமிகளும் அடியார்களுக்குப் புறகு, அவரை வலிய ஆட்கொண்டருளிய ஆரூர் வீதிவிடங்கராகிய சிவபெருமானும் புறகு என்று கோபித்தருளிய விறன் மிண்ட நாயனரது குறிப்பினை அறிந்து இறையவர் திருவருளால் சுந்தரர் திருத்தொண்டத் தொகையினை அருளிச்செய்தார். பின்பு விறன்மிண்டர் மகிழ்ச்சியை அடைந்தார். இச்செயல் பாவச்செய்கையன்று; சங்கம

பத்தியின் வலிமையே ஆம். புறத்திலே நொதுமலர் போலக் கடுஞ்சொற்களைச் சொன்னாராயினும், அகத்துச் செறுதல் இல்லாதார் சொல் நன்மை செய்தலைக் குறையுற்றால் விரைவில் அறியப்படும் என்பதாம்.

அறன் - அறம், சிவதருமம். மண்டு - நிறைந்த. மறம் - பாவம். உறுஅதவர் - நொதுமலர்; பகையும் நட்பும் இல்லாதவர் என்க. செறுஅர் - பகையாதார். ஒல்லை - விரைவு.

*குறள் அதி - 110, குறிப்பறிதல் 6.*

## அமர்நீதிநாயனார்

*நிரம்புபொருள் சேயொடமர் நீதிமனை யாளோ(டு)*
*அரன்கோ வணத்தட் டதன்நேர் - இருந்தார்*
*சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்தொருபால்*
*கோடாமை சான்றோர்க் கணி.* (7)

அடியார்களுடைய பெருமையை உலகத்துக்கு அறிவித்து ஆன்மாக்களை உய்விக்கும்படி திருவுளங் கொண்டு, திருநல்லூரிலே சிவனடியார்களுக்கு அமுதூட்டிக் கோவணம் முதலியவற்றைக் கொடுத்தலாகிய அருமையான சிவப்பணியை வழுவாமல் கடைப்பிடித்து வந்த அமர்நீதிநாயனார்பால் சிவபெருமான் அடியார்போல் வேடங்கொண்டு சென்று ஓர் கோவணத்தை வைத்திருக்கும்படி கொடுத்து, அதனை மறைத்து அதற்கு ஈடாக அவருடையநிறைந்த செல்வத்தையும் மக்களையும் மனைவியாரையும் வைத்தும் தட்டு நேர்படாமல் தாமே ஏறியிருக்கத் தட்டு நேர்பட்டவுடன் இறைவர் காட்சியளித்துத்

திருவடியிற் சேர்த்தருளினர். முன்னே தான் சமனாக நின்று பின் தன்கண் வைத்த பாரத்தை வரையறுக்கும் துலாக்கோல்போல இலக்கணங்களான் அமைந்து ஒருபக்கத்துக் கோடாமை சான்றோர்க்கு அழகாம் என்றவாறு.

கோவணத்தட்டு: இரண்டாம்வேற்றுமையுருபும் பயனும் உடன்தொக்கதொகை. சமன் செய்து - சமனாக நின்று. கோல் - துலாம். கோடாமை - வளையாமை.

*குறள் அதி - 12, நடுவுநிலைமை 8.*

## சுந்தரமூர்த்திநாயனர்

*அளந்தருள்செம் பொன்மணிமுத் தாற்றிலிட் டாரூர்க்*
*குளந்தனிலே கண்டெடுத்துக் கொண்டார் - உளைந்து*
*பரியினும் ஆகாவாம் பாலல்ல உய்த்துச்*
*சொரியினும் போகா தம.* (8)

தம்பிரான்தோழராகிய சுந்தரமூர்த்தி நாயனரின் திருத்தொண்டுக்குத் திருவுளம் மகிழ்ந்து திருமுதுகுன்றீசர் பன்னீராயிரம் பொன்னைக் கொடுத்து அங்கேயுள்ள மணிமுத்தாநதியிலே போகட்டுப் பின்பு திருஆரூரிலே கமலாலயத்திலே எடுத்துக்கொள்க என்று கட்டளையிட்டவாறே நாயனர் எடுத்துக்கொண்டார் என்பது வரலாறு. தமக்கு ஊழல்லாத பொருள்கள் வருந்திக் காப்பினும் தம்மிடத்து நில்லாவாம்; ஊழால் தமதாய பொருள்களைப் புறத்தே கொண்டுபோய்ச் சொரிந்தாலும் தம்மைவிட்டுப் போகா; பொருள்கள் ஆவதும் அழிவதும் ஊழினல் அன்றிக் காப்பினலும் காவாமையாலும் அன்று என்க.

இதனை " வருந்தி அழைத்தாலும் வாராத வாரா, பொருந்துவன போமினென்றால் போகா " என்னும் செய்யுளானும் அறிக.

பரியினும் - வருந்திக் காப்பாற்றினும். பால் - ஊழ். தம - (ஊழால்) தமதாய பொருள்கள்.

*குறள் அதி - 38, ஊழ் 6.*

## எறிபத்தநாயனார்

*பத்தர்பூ மூளி பறித்தகரி பாகரைக்கொன்(று)*
*இத்தலவேந் தஞ்ச எறிபத்தர் - கைத்தார்*
*குணமென்னும் குன்றேறி நின்றார் வெகுளி*
*கணமேயும் காத்தல் அரிது.* (9)

சிவகாமியாண்டார் என்னும் சிவனடியார் சிவ பெருமானுக்குச் சாத்தும்பொருட்டுத் தம்முடைய திருக்கரத்திலே உயர்த்தி எடுத்துச்சென்ற திருப் பூக் கூடையைப் பிடுங்கிச் சிதறிய சிறந்த மதயானையையும் அதன் பாகரையும் அரசனாகிய புகழ்ச்சோழர் அஞ்சு மாறு கொன்று, சிவனருளால் இறந்தோர் அனைவரை யும் எழுப்பிச் சிவபிரான் திருவடியைச் சேர்ந்தார் எறிபத்தநாயனார். ஆகலான், துறவு மெய்யுணர்வு அவாவின்மை முதலிய நற்குணங்களாகிய குன்றின் முடிவின்கண் நின்ற முனிவரது வெகுளி தான் உள்ள அளவு கணமே ஆயினும் வெகுளப்பட்டாராலே தடுத்தல் அரிது என்றவாறு.

சலியாமையும் பெருமையும்பற்றிக் குணங்களைக் குன்று என உருவகம் செய்தார். 'நிறைமொழி மாந்த ராகலின் காத்தல் அரிது என்றார்' என்பர் பரிமேலழகர்.

பத்தர் - சிவகாமியாண்டார். பூமூளி - திருப்பூக் கூடை. கரி பாகரை - யானையையும் பாகரையும். கைத்தார் - வெகுண்டார்.

*குறள் அதி - 3, நீத்தார்பெருமை 9.*

## ஏனாதிநாதநாயனார்

*தானாக வெல்லாதான் தன்நுதல்வி பூதியைக்கண்(டு)*
*ஏனாதி நாதர் இகல்இழந்தார் - ஆனாத*
*சால்பிற்குக் கட்டளை யாதெனில் தோல்வி*
*துலையல்லார் கண்ணும் கொளல்.* (10)

தன்னுடைய பெரும்படைகளுடன் வந்து போர் செய்து தோல்வியுற்று ஓடிய தாயாதியான அதிசூரன் என்பவன் வஞ்சனையாக நெற்றியில் திருநீற்றைப் பூசிக்கொண்டு மறைந்துவர, அவன் கிட்டியவுடன் விபூதியைக் கண்டு சிவனடியார் என மனத்திலே கொண்டு அஞ்சினவர்போல நடித்து நிற்க, பாதகனாகிய அதிசூரன் ஏனாதிநாயனாரைக் கொன்றான். நாயனாருக்குச் சிவபெருமான் காட்சிதந்து அவரைத் திருவடியில் சேர்த்தருளினர் என்பதுவரலாறு. இதனை, சால்பாகிய பொன்னின் அளவு அறிதற்கு உரைகல்லாகிய செயல் யாது? எனின், அது தம்மின் உயர்ந்தார் மாட்டுக் கொள்ளும் தோல்வியை இழிந்தார்மாட்டும் கொள்ளுதலாம் எனத் திருவள்ளுவர் கூறியருளினர்.

'வெல்லும் ஆற்றல் உடையராயினும் தோல்வியை ஏற்றுக்கொள்ளுதல். இழிந்தாரை வெல்லுதல் கருதித் தம்மோடு ஒப்பித்துக் கொள்ளாது தோல்வியால் அவரின் உயர்வராயின், அதனால் சால்பின் அளவு அறியப்படும் என்பதாம்' என்பர் பரிமேலழகர்.

*குறள் அதி - 99, சான்றாண்மை 6.*

## கண்ணப்பநாயனர்

*புண்ணப்பர் கண்ணிலென்று புன்கணுறுப் பீர்ந்தப்பிக்*
*கண்ணப்பர் அன்புறுப்பில் கைசெய்தார் - வண்ணப்*
*புறத்துறுப் பெல்லாம் எவன்செய்யும் யாக்கை*
*அகத்துறுப் பன்பில் அவர்க்கு.* (11)

பொத்தப்பிநாட்டில் உடுப்பூரில் வேடர்குலத்தில் அவதரித்தவர் திண்ணனர். அவர் வேட்டுவகுலத் தலைவனுக்கு அருமந்த புத்திரர். அவருக்குள்ள சிவ பத்தி மேலீட்டைச் சிவகோசரியார் முன்பு உலகத் தோருக்கு அறிவிக்கச் சிவபெருமான் திருவுள்ளங் கொண்டார்; தமது கண்ணில் குருதிசோரக் காட்டினர். திண்ணனர் மிக அஞ்சி வருந்திப் புண்ணுக்குப் புண்ணப்ப நினைந்து தன் கண்ணைப் பிடுங்கி அப்பினர். குருதி நிற்கக்கண்டு மகிழ்ந்திருக்கும்போதே மற்றொரு கண்ணிலும் குருதி பெருக, மீட்டும் திண்ணனர் தமது மற்றைக் கண்ணையும் பிடுங்கி அப்ப உறுதி கொண்டனர். அப்போது நில்லு கண்ணப்ப! நில்லு கண்ணப்ப!! எனக் காளத்தியப்பர் கூறித் தமது திருக்கரத்தால் திண்ணனர் கரத்தைப்பற்றி அவரைத் தமது பக்கத்தில் வீற்றிருக்கச் செய்தார் என்பது வரலாறு. இதனை, யாக்கை அகத்தின்கண் நின்று இல்லறத்துக்கு உறுப்பாகிய அன்புடையர் அல்லாதாருக்கு ஏனைப் புறத்துறுப்புக்களாகிய இடம் பொருள் ஏவல் முதலியன, அவ்வறம் செய்தற்கண் என்ன உதவியைச் செய்யும் எனத் திருவள்ளுவர் கூறினர்.

இதனை மணிவாசகர் "கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின்" எனத் திருவாசகத்தில் எடுத்தாண்டமை காண்க.

*குறள் அதி - 8, அன்புடைமை 9.*

## குங்குலியக்கலயநாயனர்

*தலையன்பி னல்வளைந்தார் தம்மைநிமிர்த் திட்டான்*
*கலையன்பின் காணிடுக்கம் காணுன் - மலைவில்*
*மடுத்தவா யெல்லாம் பகடன்னுன் உற்ற*
*இடுக்கண் இடர்ப்பா டுடைத்து.* (12)

சோழநாட்டிலே விளங்கும் திருப்பனந்தாள் என்பது ஒரு சிவதலம். அது தாடகையீச்சரம் என்று பதிகத்தில் பேசப்படும். ஒரு திருவிளையாட்டின் நிமித்தம் தாடகை என்னும் பெண்ணுக்குச் சிவலிங்கப் பெருமான் திருமேனி சாய்ந்தருளினர். அதனை முன் போல நிமிர்க்கும்பொருட்டு அரசன் பல முயற்சிகள் செய்தும் பலிக்கவில்லை. அதனுல் வருந்திய மன்னன் வருத்தத்தினை நீக்கும்பொருட்டுத் தமது கழுத்திலே கயிறுபூட்டி அன்புமேலீட்டால் இழுத்துச் சிவலிங்கத்தை நிமிர்த்திய கலயநாயனர் குங்குலிய தூபப் பணிக்கு முட்டுப்பாடுவரத் தனதுமனைவியார் தந்த மங்கிலியத்தையும் விற்றுக் குங்குலியப் பணியை மாருமல் செய்து, இம்மையில் குறைவற்ற செல்வமும் பெற்றுர்; பிறவித்துன்பமும்நீங்கினுர்;குங்குலியக்கலயர் என்ற பெயரையும் பெற்றுர். இதனை, விலங்கிய இடங்கள் எல்லாவற்றினும் சகடம் ஈர்க்கும் பகடுபோல வினையை எடுத்துக்கொண்டு உய்க்கவல்லானை வந்து உற்ற இடுக்கண் தானே இடர்ப்படுதலை உடைத்து எனத் திருவள்ளுவர் கூறினர். தன் மெய்வருத்தம் நோக்காதுமுயன்றுசெய்வோர் இன்புறுவர் என்றபடி.

இடுக்கம்; இடுக்கண் – துன்பம்.

*குறள் அதி - 63, இடுக்கணழியாமை 4.*

## மானக்கஞ்சாறநாயனுர்

பஞ்சவடிக் கென்றுசிவ பத்தர்க் குவப்பமணா
அஞ்சுகைதமென் கூந்தலரிந் தன்றிந்தார் - கஞ்சாறர்
ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர். (13)

மானக்கஞ்சாறநாயனுர் பெருமைமிக்க சிவபத்தர். அவரது தவப்புதல்வி மணக்கோலங்கொண்டிருந்த சமயத்தில் சிவபெருமான் மாவிரதி வடிவங்கொண்டு கஞ்சாறர்பால் அடைந்தார். அவரது புதல்வியின் கூந்தலைக் கண்ணுற்ருர்; இவளது தலைமயிர் நமக்குப் பஞ்சவடிக்கு ஆம் என்ருர். அவர் பெருமகிழ்வுடன் அவளது கூந்தலை அடியில் அரிந்து நீட்டிப் பெரு வள்ளன்மையை உடையரானுர். அவருடைய சங்கம பத்தியின் முதிர்ச்சியைக் கண்ட சிவபிரான் மறைந் தருளினுர். அப்பொழுதே மணமகளுக்குக் கூந்தல் முன்புபோல வளர்ந்து அழகுபெற்றது. கஞ்சாறர் தமது அருமைத் திருமகளைக் கலிக்காமருக்கு மணம் செய்வித்து மகிழ்ந்தார்; மிக்க மேலான இன்பத்தை அடைந்தார். தம்முடைய பொருளை ஈயாதுவைத்துப் பின் இழந்துபோகும் அருளில்லாதார், வறியார்க்கு வேண்டியவற்றைக் கொடுத்து அவர் மகிழ்வதைக் கண்டு தாம் மகிழும் அருளுடையார் அடையும் இன்பத்தைக் கண்டு அறியார்கொல்லோ! அறிந்தா ராயின் அவரும் அவ்வின்பத்தை அடைவாரன்ருே! அன்றியும், வைத்து இழவாரே! என்று திருவள்ளுவர் கூறிய நயம் உய்த்துணர்தற்குரியதாம் என்க.

குறள் அதி - 23, ஈகை 8.

## அரிவாட்டாயநாயனர்

போயகமர் மாவடுவும் புண்ணியர்வா யிற்கொளவே
தாயர்களத் தூறுவடுத் தான்கொண்டார் - வியாரோ
சாதலின் இன்னுத தில்லை இனிததூஉம்
ஈதல் இயையாக் கடை. (14)

சிவபெருமானுக்கு ஒவ்வொருநாளும் செங்நெல்லரிசியும் செங்கீரையும் மாவடுவும் கொண்டுசென்று நிவேதனம் செய்விப்பவர் தாயனர் என்னும் சிவனடியார். அவர் வேளாளர். அவர் ஊர் கணமங்கலம். வறுமைக்காலத்தினும் தம்முடைய பணி மாருமல் அவர் செய்து வந்தனர். ஒருநாள் அரிசியும் கீரையும் மாவடுவும் ஏந்திச்செல்லுகின்றபோது அவை கமரில் தவறி வீழ்ந்து பயன்படாவாயின. இன்று எம் சிவபெருமானுக்கு இவற்றை அமுதுசெய்விக்கும் பெரும் பேற்றை இழந்தேனே எனப் பெரிதும் வருந்தினர் தாயனர். தமது கையிலுள்ள அரிவாளினல் தமது ஊட்டியை அரியத்தொடங்கினர். சிவபெருமான் கமரிலே நீட்டிய கையுடன் விடேல் விடேல் என்று அரிவாள்பற்றிய தாயனர்கையைப் பிடித்தார்; இடபவாகனக்காட்சி தந்து அவருக்கு முத்தியளித்தருளினர். இந்த நாயனர் குடும்பத்தோடு கூடியிருந்தும், தமக்கு உறவு சிவபிரானே என்னும் மெய்யுணர்வுடையராய் அவரது திருவடிகளிலே பத்தி செலுத்தினர். தமது சரீரத்தினும் உயிர்ச்சார்பு பொருட் சார்புகளினும் சிறிதும் பற்றின்றி வாழ்ந்து இன்பம் அடைந்தார். ஒருவருக்குச் சாதல்போல இன்னுதது ஒன்று இல்லை; அத்தன்மைத்தாகிய சாதலும் வறியார்க்கு ஒன்று

ஈதல் முடியாதவழி இனியதாம் எனத் திருவள்ளுவர் கூறியமை காண்க.

கமர் - வெடிப்பு. புண்ணியர் - சிவபெருமான். தாயர் - அரிவாட்டாய நாயனர். களம் - கழுத்து. ஊறு - புண். வடு - தழும்பு. இன்னுதது - துன்பம் செய்வது.

*குறள் அதி - 23, ஈகை 10.*

## ஆனுய நாயனர்

*ஆனுயர் வேயிசையில் அஞ்செழுத்தே அஞ்செவிச்செந்*
*தேனுய் அரனுக்கந் திக்களித்தார் - கானில்*
*பொருள்கருவி காலம் வினை இடனெ டைந்தும்*
*இருள்தீர எண்ணிச் செயல்.* (15)

மந்திரங்களிலே சிறந்துவிளங்குவது பஞ்சாக்கரம். இப்பஞ்சாக்கர மந்திரத்துக்குரியவர் சிவபெருமானே. பிறவிநோயைத் தீர்க்கும் ஆற்றல் மிக்கது சிவமூல மந்திரமேயாம். சிவபெருமானிடத்து இடையருது வளரும் பேரன்பால் மனங்கசிந்து இதனைச் செபிப் போர் முத்தியை அடைவர். சமயகுரவர்கள் அருளிய பஞ்சாக்கரத் திருப்பதிகங்களால் இதன் பெருமை அறிக. இந்த மந்திரத்தை வேய்ங்குழலிலே வைத்து வாசித்துப் பெரும்பயனைப் பெற்றவர் ஆனுயநாயனர். இவர் வாசித்த வேய்ங்குழல் வாசனையானது, எவ்வுயிர் களையும் இசைமயமாக்கி, கசிந்து உருகச்செய்த பெரு வியப்பினை உடையது. ஆனுயநாயனர் மழநாட்டிலே மங்கலம் என்ற ஊரில் அவதரித்தவர்; இடைக்குலத் தவர்; பசுக்காத்தலை மேற்கொண்டவர். சிவநாமம் கீதத்தோடு கூடுமாயின் சிவபெருமான் மிக இன்புற்று

எல்லையில்லாத திருவருளைச் சுரப்பர் ஆதலின், ஆனய நாயனுர் இச்சிவப்பணியை மேற்கொண்டிருந்து முத்தி அடைந்தார். இப்பெரும்பேற்றை நினைக்கச்செய்வது மேற்கூறிய திருவள்ளுவர் குறட்பா. அது, வினை செய்யுமிடத்துப் பொருளும் கருவியும் காலமும் வினையும் இடனும் ஆகிய இந்த ஐந்தனையும் மயக்கமற எண்ணிச்செய்க என்பது.

வேய் - மூங்கில்; இங்கு வேய்ங்குழலை உணர்த்திற்று. இருள் - மயக்கம்.

*குறள் அதி - 68, வினைசெயல்வகை 5.*

## சுந்தரமூர்த்திநாயனுர்

*ஆதியிலா ரூரர்க் கமுதாக்க வேபரவை*
*வீதியெல்லாம் நெல்லாய் விளைந்ததே - நீதியால்*
*இல்லதென் இல்லவள் மாண்பானுல் உள்ளதென்*
*இல்லவள் மாணுக் கடை.* (16)

சுந்தரமூர்த்திசுவாமிகள் அடியார்களுடனிருந்து மகேசுரபூசை சிறப்புறச் செய்தருளுமாறு வேண்டிய நெல் அனுப்பிக்கொண்டிருந்த குண்டையூர்கிழார்க்கு விளைவின்மையால் அநுப்பத் தடைப்பட்டது. அதனுல் அவர் கவலையுற்ருர்; அன்றிரவு உண்ணுமல் துயில் கொண்டார். அவர் கனவில் இறைவர் தோன்றினர்; சுந்தரர்பொருட்டு உன்பால் நெல் தந்தோம் எனக் கூறியருளினர். மலைபோல் ஊர் முழுவதும் நெல் நிரம்பியது. இதனைச் சுந்தரருக்குக் குண்டையூர்கிழார் தெரிவித்தார். கோளிலிநாதர்பாற் சென்று கும்பிட்டுக் குறையிரந்தார் சுந்தரர்; ஆள்வேண்டினர். அவ்வாறே

அன்று இராத்திரி பரவையார் இல்லத்தின்முன்னும்ஊர் முழுவதுமாக நெல்மலையைப் பூதங்கள் கொண்டு வந்து குவித்தன. ஒருவனுக்கு இல்லாள் நற்குண நற் செய்கையள் ஆயினக்கால் அவனுக்கு இல்லாதது யாது? அவள் அன்னள் அல்லாக்கால் உள்ளதுதான் யாது? எனத் திருவள்ளுவர் கூறிய குறளால் இதனை அறியலாம்.

நற்குணங்களாவன; துறந்தார்ப் பேணலும், விருந்தயர்தலும், வறியார்மாட்டு அருளுடைமையும் முதலாயின. நற்செய்கைகளாவன: வாழ்க்கைக்கு வேண்டும் பொருள்கள் அறிந்து கடைப்பிடித்தலும், அட்டிற்றொழில் வன்மையும், ஒப்புரவு செய்தலும் முதலாயின. வருவாய்க்குத் தக்க வாழ்க்கையாவது: முதலை அறிந்து அதற்கு இயைய அழித்தல் என்பர் பரிமேலழகர்.

*குறள் அதி - 6, வாழ்க்கைத்துணைநலம் 3.*

## மூர்த்திநாயனார்

*சேர்த்திமுழங் கையெலும்பும் தேயச்செஞ் சந்தனமா*
*மூர்த்திமது ரேசருக்கு முன்பரைத்தார் - பார்த்திரோ*
*அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்*
*என்பும் உரியர் பிறர்க்கு.* (17)

நாடோறும் திருவாலவாயில் சொக்கேச மூர்த்திக்குச் செஞ்சந்தனக்காப்புப் பணிவிடை தவறாமல் நடத்திவந்தவர் மூர்த்திநாயனார். அக்காலத்துச் சமண அரசன் நாயனாரையும் சமணமதத்தில் சேர வற்புறுத்தினான். அரசன் ஆணைப்படி நாயனாருக்குச் சந்தனக்

கட்டை கிடையாமல் முட்டுப்பாடும் வந்தது. மிக வருந்தினுர். பின்பு தமது கையெலும்பு தேயும் வண்ணம் சந்தனக்கல்லில் தேய்த்தார். சொக்கலிங்க மூர்த்தி தடுத்து, சடையையே முடியாகக்கொண்டு அவர் தமிழ்ப்பாண்டிநாட்டை ஆளும்படி செய்தார். பின்பு தமது திருவடியில் சேர்த்துக்கொண்டார். அன்பிலாதார் பிறர்க்குப் பயன்படாமையின் எல்லாப் பொருளானும் தமக்கே உரியர்; அன்புடையார் அவற்ருனே அன்றித்தமது உடம்பானும் பிறர்க்குரியர் எனத் திருவள்ளுவர் கூறியருளினமை காண்க.

*குறள் அதி - 8, அன்புடைமை 2.*

## முருகநாயனுர்

*மட்டார்தார் கன்னி வகைசிவபூ சைக்கொருநாள்*
*முட்டாது செய்தார் முருகனுர் - விட்டாரோ*
*விழ்நாள் படாஅமை நன்ருற்றின் அஃதொருவன்*
*வாழ்நாள் வழியடைக்கும் கல்.* (18)

சோழநாட்டிலே உள்ள திருப்புகலூரிலே சிவ பெருமானுக்கு உரியனவாம் எனச் சிவாகமங்களிலே விதிக்கப்பட்ட பூக்களை, மெய்யன்போடு விதிப்படி கொய்து, பலவகைப்பட்ட மாலைகளைச் செய்து, சிவ பெருமான் திருவடிகளுக்குச் சாத்தி அருச்சனை செய் தலும், பஞ்சாக்கரம் செபித்தலும் வழுவாது செய்து சிறப்புற்றவர் முருகநாயனுர். இந்தச் சிவபுண்ணியப் பேற்ருல் பரசமய கோளரியாகிய திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகளுக்குத் தோழர் ஆகிய பெரும்பேறு பெற்ருர். அவரால் திருப்புகலூர்த் தேவாரத்திலே

வைத்துப் புகழப்பெற்ருர். பின்பு திருஞானசம்பந்த மூர்த்திநாயனுருடைய திருமணகாலத்தில் சிவபெருமானுடைய திருவடி நிழலை அடைந்தார். அரிய மனித உடம்பினை எடுத்தோர் பெரும் பேருகிய தவத்தையே செய்து அவத்திலே பொழுது கழியாமல் வாழ்நாளைக் கழிப்பானுயின், அஃது அவனுக்கு மேல் வரக்கடவதாகிய பிறப்பு இறப்புக்களை ஒழிக்கும் பரம உபாயம் ஆகும் எனத் திருவள்ளுவ நாயனுர் கூறியருளியமை காண்க.

ஈண்டுத் தவமாவது சரியை கிரியை யோகம் ஞானம் என்பன.

"மானுடப் பிறவிதானும் வகுத்தது மனம் வாக் காயம் ஆனிடத்து ஐந்தும் ஆடும் அரன்பணிக்காக அன்றே" எனவும், "நிலைபெறுமா றெண்ணுதியேல்" எனவும், "பூக்கைக் கொண்டரன் பொன்னடி போற்றிலார்" எனவும், "முத்தனே முதல்வா" எனவும் வரும் பெரியோர் திருவாக்குக்களால் இதனை உணர்க.

மட்டு - தேன். முட்டாது - தவருது. ஆற்றின் - செய்வானுயின்.

*குறள் அதி - 4, அறன்வலியுறுத்தல் 8.*

## உருத்திரபசுபதிநாயனுர்

*உருத்திரமே சொல்லி உதகத்துள் ளே நின்(று)*
*உருத்ர பசுபதியார் உற்ருர் - திருத்தாள்*
*தவம்செய்வார் தம்கருமம் செய்வார் மற்றல்லார்*
*அவம்செய்வார் ஆசையுட் பட்டு.* (19)

சிவபெருமானிடத்து இடையருத மெய்யன் போடு ஸ்ரீஉருத்திரமந்திரத்தைத் தடாகத்திலே இரவு பகல் கழுத்தளவினதாகிய நீரிலே நின்று கொண்டு ஐம்புலன்களை அடக்கி, தியானம் செய்து ஓதினமை யால் முத்திபெற்றவர் உருத்திர பசுபதி நாயனர். உருத்திரமந்திரத்துக்கு உரியவர் தமது வாணுளை வீணுளாகக் கழியாமல் சிவனை மறவாத சிந்தையோடும் நியமமாக அதனைஓதக்கடவர். வேதம் 4, வேதாங்கம் 6, நியாயம் மீமாஞ்சை மிருதி புராணம் முதலிய உபாங்கம் ஆகிய பதினுன்கு வித்தைகளினுள்ளும் வேதமே மேலானது; வேதத்துள்ளும் உருத்திரைகாதசினி மிக மேலானது; அதினுள்ளும் ஐந்தெழுத்து மேலானது; அதினுள்ளும் 'சிவ' என்னும் இரண்டு எழுத்தே மேலானது. இவ்வாறு சிவதத்துவவிவேக விருத்தியில் கூறப்பட்டது. வேத புருஷனுக்கு ஸ்ரீ உருத்திரம் கண்ணும், இதனுள்ளிருக்கின்ற பஞ்சாக்கரம் கண் மணியுமாம். இது சதுர்வேததாற்பரிய சங்கிரகத்தில் காண்க. தங்கருமம் செய்வாராவார் துறந்து தவத்தைச் செய்வார்; அவரை ஒழிந்த பொருள் இன்பங்களைச் செய்வார் அவற்றின்கண் ஆசையாகிய வலையுட் பட்டுத் தமக்குக் கேடுசெய்வார் என்றார் திருவள்ளுவ நாயனர்.

அநித்தமாய், மூவகைத் துன்பத்ததாய், உயிரின் வேருய உடற்கு வருத்தம் வரும் என்று ஒழியாது தவத்தினைச் செய்யப் பிறப்பு, பிணி, மூப்பு, இறப்புக் களால் அநாதியாகத் துன்பம் எய்திவருகின்ற உயிர் ஞானத்தால் வீடுபேற்றை அடையும் ஆதலால் தவம் செய்வார் தங்கருமம் செய்வாராயினர்.

உதகம் - நீர். திருத்தாள் - திருவடி. மற்று என்றது பொருள் இன்பங்களை. அவம் - கேடு.

*குறள் அதி - 27, தவம் 6.*

## திருநாளைப்போவார் நாயனர்

*மூவா யிரமறையோர் மொய்ப்பத் திருநாளைப்*
*போவார் சிதம்பரத்துட் போயடைந்தார் - ஓவாப்*
*பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்*
*கருமமே கட்டளைக் கல்.* (20)

சோழவளநாட்டில் ஆதனூரிலே நந்தனர் என்பவர் அவதரித்தார். பூர்வசன்மங்களில் செய்துள்ள புண்ணியமேலீட்டால் அவர் சிதம்பரதரிசனம் செய்ய வேண்டுமென முறுகியசிந்தை உடையரானர். அவர் தாம் தோன்றிய புலையர் குலத்துக்கு இயையப் புறத்தொண்டு செய்துவரும் கடப்பாடு உடையராயினர். புலியூருக்கு 'நாளைப்போவேன் நாளைப் போவேன்' என்னும் பெரும்பற்றுடையராய்ச் சிவனை மறவாத சிந்தையுடையராய்க் கவலையும் பெரிதுற்ருர். தில்லை எல்லை சென்றும் எல்லைப்புறத்தே வலம்வந்து அவர் இறைவரை வணங்கிவந்தார். கூத்தப்பிரான்திருவருளால் வளர்க்கப்பட்ட தீயிடை மூழ்கிப் புண்ணிய மாமுனி வடிவாய்த் தில்லைவாழந்தணர்களும், சிவனடித் தொண்டர்களும் வணங்கி உடன்வரச் சிற்றம்பலத்தை நோக்கி நடந்தார். திருநாளைப்போவாரை யாவரும் கண்டிலர்; அதிசயித்தனர். சிவபுண்ணியங்களை நாம் செய்தல் அருமை என்று விரும்பாது ஒழிதல் பெருங்குற்றமாம்; இடைவிடாது விரும்பினல் சிவபெருமான் திருவருளால் அது முற்றுப்பெறும்.

இந்தப்பிறப்பிலே முற்றுப்பெருதாயினும் மறுபிறப் பிலே முற்றுப்பெறுதல் நிச்சயம் என்பது திருநாளைப் போவார் வரலாற்ருல் நாம் அறிகின்ரேம். பிறப்பு குணம் அறிவு என்பனவற்ருல் மக்கள் எய்தும் பெருமைக்கும் மற்றைச் சிறுமைக்கும் உரைகல் லாவது அவரவர்கள் செய்யும் கருமமே, பிறிதில்லை எனத் திருவள்ளுவர் கூறியமை காண்க.

மொய்ப்ப - சூழ்ந்துவர. ஓவா - நீங்காத. கருமம் - செயல். கட்டளைக்கல் - உரைகல்.

*குறள் அதி - 51, தெரிந்துதெளிதல் 5.*

## திருக்குறிப்புத்தொண்டநாயனர்

*தொண்டர் குறிப்பறிந்த தொண்டர் திருக்குறிப்புத்*
*தொண்டரைத்தம்கந்தைதந்துசோதியராட் - கொண்டார்*
*குறிப்பிற் குறிப்புணர் வாரை உறுப்பினுள்*
*யாது கொடுத்தும் கொளல்.* (21)

காஞ்சீபுரத்திலே ஏகாலியர்குலத்திலே ஒரு சிவத் தொண்டர் அவதரித்தார். அவர் மனம் மொழி மெய் களால் சிவபெருமானுக்குரிய வழிபாடுகளைச் செய்து வந்தார். சிவனடியார்களின் திருக்குறிப்பறிந்து பணி களைச் செய்யும் சிறப்பினுல் திருக்குறிப்புத்தொண்டர் என்னும் பெயரையும் அவர் அடைந்தார். அடியார் களின் தூசுடைய மாசு கழிக்கும் தொண்டினுல் பெரும் புகழ் பெற்ருர். அவர்பால் இறைவர் அடியார் வேடங்கொண்டு சென்ருர். அந்த அடியாருக்குத் தாம் குறித்தகாலத்தில் கந்தை ஒலித்து உலர்த்திக் கொடுக்க இயலாமல் பதைப்புற்ருர்; ஆடைகளைப் புடைக்கும்

கற்பாறையில் தமது தலையை எற்றினர். இவருடைய மெய்யன்புக்கு இரங்கிய சிவபெருமான் கற்பாறையின் பக்கத்திலே தமது திருக்கரத்தைத் தோற்றுவித்து' இவரைப் பிடித்தருளினர்; இடபாருடராய் வெளிப் பட்டார்; முத்தி கொடுத்தருளினர். தம் குறிப்பு நிகழுமாறு அறிந்து அதனல் பிறர் குறிப்பு அறியும் தன்மையாரை அரசர் தம் உறுப்புக்களுள் அவர் வேண்டுவது ஒன்றனைக் கொடுத்தாயினும் தமக்குத் துணையாகக் கொள்க எனத் திருவள்ளுவநாயனர் வற்புறுத்தினமை காண்க.

உறுப்பினுள் என்றது பொருள் நாடு யானை குதிரை முதலிய புறத்துறுப்புக்களை என்க.

*குறள் அதி - 71, குறிப்பறிதல் 3.*

## சண்டேசுர நாயனர்

*அறம்செய்த தாதைதாள் அற்றிடச்சண் டீசர்*
*மறம்செய்கொலை புண்ணியமாய் வாழ்ந்தார் - திறம்தெரி*
*நல்லவை எல்லாஅம் தீயவாம் தீயவும் [யின்*
*நல்லவாம் செல்வம் செயற்கு.* (22)

சோழவளநாட்டிலே திருச்சேய்ஞலூரில் அவ தரித்தவராகிய விசாரசருமர் பசுக்களைமேய்த்தல் சிவ புண்ணியம் எனத்தெளிந்து மண்ணியாற்றின்கரையில் கொண்டுபோய் மேய்த்துத் தண்ணீர் காட்டி மாலையில் வீட்டுக்குக் கொண்டு சேர்ப்பார். நாடோறும் மண்ணி யாற்றின் கரையில் மணலால்செய்த சிவலிங்கத்துக்குப் பசுக்களின் பாலைக்கறந்து இவர் பூசித்துவந்தார். ஒரு நாள்வழக்கம்போல இவர் சிவபூசைசெய்யும்பொழுது,

தந்தையாகிய எச்சதத்தன், முதுகிலே பலமுறை அடித்துக் கொடுமொழிகளைக் கூறவும், அவற்றைச் சிறிதும் அறிந்திலர்; பாற்குடத்தைக் காலால் இடறிச் சிந்தக் கண்டபோது எச்சதத்தன் தம் தந்தை எனக்கண்டும், பிராமணன், குரு எனத் தெரிந்தும், சிவாபராதம் செய்தமைபற்றிப் பொருராய் இவர் அவனது கால்களைத் துணித்தார்; முன்போலவே பூசித்தார். உடனே கருணை நிதியாகிய சிவபெருமான் இடபாரூடராய் வெளிப்பட்டார்; தமது அருமைத் திருக்கரங்களால் இவரை எடுத்து, 'நீ நம்பொருட்டு உன்னைப்பெற்ற பிதாவை வெட்டினாய்; இனி, உனக்கு நாமே பிதா' என்றார்; இவரை அணைத்தார்; சரீரத்தைத் தடவினார்; உச்சி மோந்தார்; அந்தச் சரீரத்தில்தானே சிவசாரூப்பியம் தந்தார்; தொண்டர்க்கு எல்லாம் தலைமையாகிய சண்டேசுரபதத்தில் இருத்தியருளினார். செல்வத்தை ஆக்குதற்கு நல்லவையெல்லாம் தீயவாய் அழிக்கும்; அதுவேயன்றித் தீயவைதாமும் நல்லவாய் ஆக்கும் ஊழ்வயத்தான் எனத் திருவள்ளுவர் கூறியமையால் இதனை அறிக.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார், திருநாவுக்கரசுநாயனார், சுந்தரமூர்த்திநாயனார், மாணிக்கவாசகசுவாமிகள், சேந்தனார் முதலிய பெரியோர் பலரால் இந்நாயனாரது பெருந்தன்மை பாராட்டப்பட்டுள்ளது காண்க. "அரனடிக்கன்பர் செய்யும் பாவமும் அறமதாகும்" என்று தொடங்கும் சித்தியார் திருவிருத்தமும் ஈண்டுக் கருதுக.

தாதை - தந்தை. மறம் - பாவம்.

*குறள் அதி - 38, ஊழ். 5.*

## சுந்தரமூர்த்திநாயனார்

*ஓராப் பரவைக் குமாபதியைத் தூதாக்கித்*
*தீராப் புலவியையும் தீர்த்தாரே - ஆரூரர்*
*உப்பமைந் தற்றால் புலவி அதுசிறிது*
*மிக்கற்றான் நீள விடல்.* (23)

திருவொற்றியூரிலே அவதரித்துச் சிவப்பணி செய்துவந்த சங்கிலியாரைத் தம்பிரான்தோழராகிய சுந்தரமூர்த்திசுவாமிகள் ஊழின்வயத்தினால் ஒப்புக் கொண்டார் என்பதை அறியாத பரவையார், திரு ஆரூரிலே கொண்டிருந்த ஊடலைச் சிவபெருமானையே தூதாக அனுப்பித் தீர்த்துக்கொண்டார் என்பது வரலாறு. புலவி கலவி இன்பஞ்செயற்கு வேண்டும் அளவிற்றாதல், உப்புத் துய்ப்பனவற்றை இன்சுவைய ஆக்கற்குவேண்டும் அளவிற்றாதல் போலும்; இனி, அதனை அவ்வளவில் சிறிது மிகவிடுதல் அவ்வுப்பு அளவின் மிக்காற்போலும் என்றார் திருவள்ளுவ நாயனார்.

உப்பு மிக்கவழித் துய்ப்பது சுவையின்று ஆனாற் போலப் புலவி மிக்கவழிக் கலவி இன்பமின்றாம் என்பது கருத்து. புலவி - சிறுபிணக்கு.

*குறள் அதி – 131, புலவி 2.*

## திருநாவுக்கரசுநாயனார்

*தரைசேர் சமண்நீங்கிச் சைவம்சேர் நாவுக்(கு)*
*அரைசர் வயிற்றுவலி அற்றார் - உரைசேர்ந்த*
*சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்*
*சார்தரா சார்தரு நோய்.* (24)

உலகமுழுவதும் பரவியிருந்த ஆருகதசமயத்தை, நம்பர் அருளாமையினல் மருணீக்கியார் அநுட்டித்து அச்சமயத்திற்குத் தலைவரும் ஆயினர்; தருமசேனர் என்னும் சிறப்புப் பட்டத்தையும் பெற்றார். திலக வதியார் வேண்டிக்கொள்ள, அவர் முன்புசெய்த சிவ புண்ணியமும் முதிர, மருணீக்கியாரை ஆட்கொள்ளும் கருணையினல் சிவபெருமான் சூலை நோயை ஏவினர். அவர் அதனல் உண்டாகிய துன்பம் அதிகரித்துச் சமண்பள்ளியைவிட்டுத் திருவதிகையை அடைந்தார். சிவத்தொண்டு செய்துகொண்டிருந்த தமக்கையாரின் ஆணைப்படி சைவசமயம் சார்ந்தார்; வயிற்று வலியும் அற்றார். தேவாரத்திருப்பதிகம் பாடினர். திருநாவுக் கரசர் என்ற பெயரையும் சிவபெருமான் கொடுத்து ஆட்கொண்டருளினர். ஒருவன் எல்லாப்பொருட்கும் சார்பாய செம்பொருளையுணர்ந்து இருவகைப்பற்றும் அற ஒழுகவல்லனயின், அவனை முன் சாரக்கடவன வாய் நின்ற துன்பங்கள் அவ்வுணர்வு ஒழுக்கங்களை அழித்துப் பின் சாரமாட்டா என்றருளினர் திருக்குறள் ஆசிரியர்.

அரைசர்; அகர ஐகாரப் போலி. சார்தரா - சேர மாட்டா.

*குறள் அதி - 36, மெய்யுணர்தல் 9.*

*நீற்றறைநஞ் சானைகடல் நேருற்றார் அப்பர்க்கு*
*மாற்றமணர் பின்னிருந்து வாழ்ந்தாரோ - ஆற்றரிய*
*நோயெல்லாம் நோய்செய்தார் மேலவாம் நோய்செய்யார்*
*நோயின்மை வேண்டு பவர்.* (25)

தங்களது அருகசமயகுரவராகிய தருமசேனர் சைவ சமயத்தைச் சார்ந்து வீற்றிருக்கின்றார் என்றதைக்

கேட்ட சமணர்கள் மனம்பொருராயினர். அரசனைக் கொண்டு அவருக்கு எல்லையில்லாத துன்பங்களைச் செய்ய முற்பட்டனர். நீற்றறையிலே வைத்துப் பூட்டியது, விடத்தை ஊட்டியது, மதயானையின் காலில் வைத்து இடறச் செய்தது, கருங்கல்லிலே கட்டிக் கடலில் வீழ்த்தியது ஆகிய பற்பல கொடுஞ் செயல்களைச் செய்வித்தும் யாதொரு தீங்கும் நேரிடாமல் சிவபெருமான் அருளால் நீண்டகாலம் வாழ்ந்து, சிவாநுபூதிச் செல்வராயினர். திருநாவுக் கரசருக்குச் சமணர்செய்த தீங்குகள் அத்தனையும் சமணர்கள் சுகவாழ்விற்கு ஒருங்கே கேடாய் முடிந்தன. இன்னாதன எல்லாம் பிறிதோர் உயிருக்கு இன்னாதன செய்தார் மேலவாம்; அதனால் தம் உயிருக்கு இன்னாதன வேண்டாதார் பிறிதோர் உயிருக்கு இன்னாதன செய்யார் என்றருளினர் திருவள்ளுவர்.

நேருற்ரூர் - உடன்பட்டார். மாறு - பகை.

*குறள் அதி — 32, இன்னுசெய்யாமை 10.*

*மருள்நீக்கி யார்தரும சேனருமாய் நாவுக்(கு)*
*அரசரப்ப ராகியின்பம் ஆனார் - அருளால்*
*இருள்நீங்கி இன்பம் பயக்கும் மருள்நீங்கி*
*மாசறு காட்சி யவர்க்கு.* (26)

மருணீக்கியார் என்பது பிள்ளைத்திருநாமம். தருமசேனர் என்பது சமண சமயத்துத் தலைவராயிருந்த காலத்துப் பெற்றது. நாவுக்கரசர் என்பது சிவபெருமான் அருளியது. அப்பர் என்பது திருஞானசம்பந்த மூர்த்தி நாயனாரால் அழைக்கப்பெற்றது. சிவஞானப் பெருக்குடையராய்ப் பேரானந்தப் பெருவாழ்விலே

திளைத்திருந்தார் சைவசமயாசாரியருள் ஒருவராகிய வாகீசர். அவிச்சையின் நீங்கி மெய்யுணர்வுடையராயி ஞருக்கு அம்மெய்யுணர்வு பிறப்பினை நீக்கி வீட்டினைக் கொடுக்கும் என்ருர் திருவள்ளுவர்.

*குறள் அதி - 36, மெய்யுணர்தல் 2.*

*விண்களிப்பக் காணு வியன்கயிலை வாழ்வை அப்பர்*
*கண்களிப்ப ஐயாற்றில் கண்டுவந்தார் - எண்களிப்பக்*
*கண்ணுடையர் என்பவர் கற்ருேர் முகத்திரண்டு*
*புண்ணுடையர் கல்லா தவர்.* (27)

விண்ணுலகத்தாராலும் மகிழ்ந்து காணமுடியாத திருக்கயிலாயச்சிறப்பினைத் திருநாவுக்கரசு சுவாமிகள், திருவருளால் திருவையாற்றிலே ஊனக்கண்களும் பெற்றபயனை அடையுமாறு தரிசித்துச் சிவானந்தப் பேற்றில் திளைத்திருந்தனர். கண்ணுடையர் என்று உயர்த்துச் சொல்லப்படுவார் கற்றவரே; மற்றைக் கல்லாதவர் முகத்தின்கண் இரண்டு புண்ணுடையர்; கண்ணிலர் என்று கூறிஞர் திருவள்ளுவநாயஞர்.

தேயம் இடையிட்டவற்றையும் காலம் இடையிட்டவற்றையும் காணும் ஞானக்கண்ணுடைமையின் கற்ருரைக் கண்ணுடையர் என்றும், அஃதின்றி நோய் முதலியவற்ருல் துன்பம் செய்கின்ற ஊனக் கண்ணே உடைமையின் கல்லாதவரைப் புண்ணுடையர் என்றும் கூறிஞர் என உரைவிளக்கம் கூறினர் பரிமேலழகர்.

விண் - தேவருலகம். ஐயாறு - திருவையாறு என்னும் தலம்.

*குறள் அதி — 40, கல்வி 3.*

மாமணிபொன் மாதரெதிர் வந்துறினும் பற்றற்ருர்
தாமரன்பால் வந்தரசர் தாழ்த்தாரோ - ஆமெனவே
பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் மற்று
நிலையாமை காணப் படும். (28)

திருநாவுக்கரசுசுவாமிகள் வழக்கம்போலத் திருப்புகலூர்ச் சிவாலயத்திலும் உழவாரத் திருப்பணி செய்துகொண்டிருந்தார். திருவருளாணையால் அங்கே உழவாரப்படையில் பொன்னும் மணியும் மிகுதியாகத் தட்டுப்பட்டன. அவர் அவைகளை எல்லாம் வாரி வாரி வெளியிலே எறிந்தார். தெய்வமகளிர் தம்முன் நின்று விகாரப்பாடுகளைச் செய்தும் ஏறெடுத்தும் பார்த்திலர்.

'' பொய்ம்மாயப் பெருங்கடலில் புலம்பா நின்ற
புண்ணியங்காள் தீவினைகாள் திருவே நீங்கள்
இம்மாயப் பெருங்கடலை அரித்துத் தின்பீர்க்
கில்லையே கிடந்துதான் யானேல் வானேர்
தம்மானைத் தலைமகனைத் தண்ணல் ஆரூர்த்
தடங்கடலைத் தொடர்ந்தோரை அடங்கச் செய்யும்
எம்மான்தன் அடித்தொடர்வான் உழிதர் கின்றேன்
இடையிலேன் கெடுவீர்காள் இடறேன் மின்னே''

என்னும் தொடக்கத்தினையுடைய திருத்தாண்டகத் திருப்பதிகத்தை அவர் அருளிச்செய்தார். பின்பு சிவபெருமான் திருவடியிலே சேர்ந்தார். ஒருவன் இருவகைப்பற்றும் அற்றபொழுதே அப்பற்றறுதி அவன் பிறப்பை அறுக்கும்; அவை அருதபொழுது அவற்ருல் பிறந்து இறந்து வருகின்ற நிலையாமை காணப்படும் என்றருளினர் வள்ளுவர்.

'' அற்றது பற்றெனில் உற்றது விடு '' என மேற்கோள்காட்டி விளக்கினர் பரிமேலழகர்.

மாதர் என்றது அரம்பையர்களை. அரன் - திருப் புகலூர்ப்பெருமான். தாழ்த்தாரோ - தாமதித்தாரோ; ஓகாரம் எதிர்மறை; இல்லை என்றபடி.

*குறள் அதி - 35, துறவு 9.*

## குலச்சிறைநாயனார்

*நலச்சிறைநீர் வேணியார் நல்லடியார் யார்க்கும்*
*குலச்சிறையார் தாம்பணிதல் குன்றார் - இலக்கிகழார்*
*எல்லார்க்கும் நன்றாம் பணிதல் அவருள்ளும்*
*செல்வர்க்கே செல்வம் தகைத்து.* (29)

பாண்டிய நாட்டிலே மணமேற்குடியிலே குலச் சிறைநாயனார் என்பவர் அவதரித்தார். விபூதி, உருத்தி ராக்கம் தரிக்கின்றவர்களும் திருஐந்தெழுத்தை இடை யறாது ஓதுகின்றவர்களும் ஆகிய சிவனடியார்களை வணங்கித் துதித்து அவர்க்கு வேண்டும் உதவிகளை எல்லாம் செய்யும் பணிபூண்டவர்; குணமிலராயினும் அவரை இகழ்ச்சி செய்திலர்; பாண்டிய அரசராகிய நின்றசீர்நெடுமாறனுக்கு முதல் மந்திரியாக இருந்து அரசுபுரிவித்தார். பரசமய கோளரியாகிய ஆளுடைய பிள்ளையாரை வணங்கிப்போற்றி அவரால் தேவாரத் திருப்பதிகத்திலே வைத்துப் பாராட்டப்பெற்ற சிறப் பினையும் பெற்றார். சுந்தரமூர்த்திசுவாமிகளால் திருத் தொண்டத்தொகையிலே "பெருநம்பி" என்று வியந் துரைக்கப்பட்டார். பெருமிதம் இன்றி அடங்குதல் எல்லார்க்கும் ஒப்ப நன்றே எனினும், அவ்வெல்லா ருள்ளும் செல்வம் உடையார்க்கே வேறொரு செல்வ மாம் சிறப்பினையுடைத்து எனத் திருக்குறளாசிரியர் கூறியருளினமை காண்க.

நலம் - அழகு. நீர் என்றது கங்காநதியினை. வேணி - சடை. இலர்க்கு - குணம் முதலியன இல்லாதவர்களையும்; உருபுமயக்கம். பணிதல் - அடங்குதல். தகைத்து - சிறப்பினை உடைத்து.

*குறள் அதி - 13, அடக்கமுடைமை 5.*

## பெருமிழலைக்குறும்பநாயனார்

*நாவலர்கோ மான்கயிலை நாளைப்போ மென்றுமுன்போய்*
*மேவிமிழ லைக்குறும்பர் விற்றிருந்தார் - யாவருக்கும்*
*இன்னா தினன்இல்லார் வாழ்தல் அதனினும்*
*இன்னா தினியார்ப் பிரிவு.* (30)

சுந்தரமூர்த்தி நாயனாரையே உபாசித்துக்கொண்டிருந்து அப்பெரும் பேற்றினாலே அட்டமாசித்தியும் கைவரப்பெற்ற சிவயோகியார் பெருமிழலைக் குறும்ப நாயனார் என்பவர். சுந்தரமூர்த்திநாயனார் சிவபெருமான் ஆணைப்படி திருக்கைலாசத்துக்கு அயிராவணம் என்னும் யானையின்மேலேறித் திருவஞ்சைக்களத்திலிருந்து எழுந்தருளுவதைத் தமது சிவயோகக்காட்சியால் அறிந்து, 'அவரைப் பிரிந்து நான் இங்கே வாழமாட்டேன்' என்னும் உறுதிபூண்டு, அவருக்கு முன்பு இன்றே சென்று அங்கு அடைவேன் என யோக முயற்சியினாலே பிரமரந்திரம் திறப்ப உடலினின்றும் பிரிந்து திருக்கைலாசத்திலே சென்றிருந்தார். மகளிர்க்குத் தங்குறிப்பறியும் தோழியர் இல்லாத வேற்றாரின்கண் வாழ்தல் இன்னாது; அதன்மேலும் தங்காதலரைப் பிரிதல் அதனினும் இன்னாது எனப் பொருள்படக் காமத்துப்பாலில் பிரிவாற்றாமை என்னும் அதிகாரத்தில் கற்பியல் முதற்கண் திருவள்ளுவர் கூறியமை காண்க.

நாவலர்கோமான் – சுந்தரமூர்த்திநாயனுர். இனி யார் என்றது காதலரை.

*குறள் அதி - 116, பிரிவாற்ருமை 8.*

## காரைக்காலம்மையார்

*என்புருவால் அம்மைஎள்ள ஈசர்நமக் கம்மைஎன்னும்*
*அன்புருவாள் காரைக்கால் அம்மைகாண் - முன்பே*
*உருவுகண் டெள்ளாமை வேண்டும் உருள்பெருந்தேர்க்*
*கச்சாணி அன்னுர் உடைத்து.* (31)

காரைக்காலிலே வணிகர் குலத்திலே தனதத்தன் என்பவருக்குப் புத்திரியாராகப் புனிதவதியார் அவதரித்தார். அவரை நாகப்பட்டினத்தில் உள்ள நிதிபதியின் மைந்தன் பரமதத்தனுக்கு மணம் செய்வித்தனர். கணவரைத் தெய்வம் எனவே வழிபட்டார் காரைக்காலம்மையார். சிவனடியாரைச் சிவனெனவே மதித்து வழிபடும் நியமமுமுடையவர். அடியாருக்கு அருத்திய மாங்கனி சிவனருளால் வரக்காட்டினுர். கணவர் கூறியபடியே மற்றெரு மாங்கனியும்பெற்ருர். கண்ட பரமதத்தன் இவர் தெய்வமே, மானிடமல்லர் என மதித்தான்; வணக்கமும் செய்தான். அவர் கணவன்பொருட்டுத் தாங்கிய தசையுடம்பைத் திருவருளால் உதறி எற்புடம்புபெற்ருர். தலையால் நடந்து கயிலைசென்ருர். உமாதேவியார், வருகின்ற இவர் யாவரென்ருர்; நகைத்தார். சிவபெருமான் காரைக்காலம்மையை அம்மையே! வருக என்றருளினுர். புனிதவதியார் அப்பா! என்று அழைத்து அருகிலேசென்ருர். அம்மையார் விரும்பியவண்ணம் திருவாலங்காட்டில் திருநடன தரிசனம் செய்திருக்குமாறு சிவபெருமான்

திருவருள்செய்தார். உருளாநின்ற பெரிய தேருக்கு அச்சின்கண் ஆணிபோல, வினைக்கண் திண்ணியாரை யுடைத்து உலகம்; அதனால், அவரை வடிவின்சிறுமை நோக்கி இகழ்தலை ஒழிக என்றார் திருவள்ளுவ நாயனார்.

அம்மை - உமாதேவியார். எள்ள - இகழ.

குறள் அதி - 67, வினைத்திட்பம் 7.

## அப்பூதியடிகணாயனார்

*அரசினைஅப் பூதி அடிகளறி வாரோ*
*உரைசெயுணர் வால்உறு நட் புற்றார் - மருவிப்*
*புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்*
*நட்பாம் கிழமை தரும்.* (32)

சோழநாட்டிலே திருவையாற்றுக்கு அணிமையில் உள்ளது திங்களூர். அவ்வூரிலே அவதரித்தவர் அப்பூதியடிகள். இவர் திருநாவுக்கரசு சுவாமிகளை நேரிலே தரிசித்திலர், அவர் மகிமைகளைக் கேட்டறிந்த துணையானே அவர்பால் பத்திமிக்கவர் ஆயினர். தம்முடைய வீட்டில் உள்ள அளவைகள், தராசுகள், பிள்ளைகள், பசுக்கள், எருமைகள் முதலிய எல்லாவற்றிற்கும் அவரது திருப்பெயரையே இட்டழைத்தார். திருமடங்கள் தண்ணீர்ப்பந்தர் குளம் திருநந்தனவனம் முதலியவற்றையும் அவர்பெயரினாற் செய்திருந்தார். பின்பு திருநாவுக்கரசு சுவாமிகளை நேரிலே தரிசிக்கப் பெற்றுப் பேரின்பம் அடைந்தார். பாம்பு கடித்திறந்த தமது மகனையும் மறைத்துவைத்துத் திருவமுதூட்டக் கருதியபோது, அதனைத்திருவருளால் அறிந்துகொண்டு

திருக்கோயில்முன் சென்று பதிகம்பாடியருளி விடத்தைப் போக்கியருளிய அப்பர்சுவாமிகள் ஆணையால் யாவரும் உடனிருக்க அமுதுண்டார். பின்பு சிவனடியில் கலந்தருளினர். ஒருவனோடு ஒருவன் நட்பு ஆதற்குப் புணர்ச்சியும் பழகுதலும் ஆகிய காரணங்கள் வேண்டுவதில்லை; இருவர்க்கும் ஒத்த உணர்ச்சிதானே நட்பாம் உரிமையைக் கொடுக்கும் என வள்ளுவர் கூறியமை காண்க.

அரசு - திருநாவுக்கரசு சுவாமிகள், புணர்ச்சி - ஒருதேயத்தராதல். பழகுதலாவது பலமுறை கண்டும் பேசியும் மருவுதல். கிழமை - உரிமை.

*குறள் அதி - 79, நட்பு 5.*

## திருநீலநக்கநாயனார்

*நலங்கொடிரு நீலநக்கர் நாதர்மேல் இல்லாள்*
*சிலம்பிவிழ வாய்மருந்து செய்தாள் - சலம்கொளுமுன்*
*நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்*
*வாய்நாடி வாய்ப்பச் செயல்.* (33)

சோழமண்டலத்தில் உள்ளது சாத்தமங்கை என்னும் தலம். அத்தலத்திலே அந்தணர் குலத்தில் திருநீலநக்கநாயனார் என்னும் பத்திமான் ஒருவர் இருந்தார். நாயனார் ஒரு திருவாதிரை நாளில் தமது சிவபூசையை முடித்தார்; அயவந்தி என்னும் ஆலயத்தில் மனைவியுடன் சென்று சிவார்ச்சனை செய்தார்; பின்பு தியானத்திலிருந்தார். அப்பொழுது சிவலிங்கத்தின்மேல் ஒரு சிலந்திப்பூச்சி விழுந்தது. கண்ட மனைவியார் உடனே சிவலிங்கத்தின்மேல் ஊதித் துமிந்தார்.

நாயனுர் அதனை அநுசிதம் என்று தம் மனைவியாரைக் கோபித்து ஒதுக்கினுர். வீட்டிற்குச்சென்று நித்திரை செய்தார். திருமேனியில் எச்சில் துமிந்த இடம் தவிர மற்றுள்ள இடங்களில் சிலம்பியின் கொப்புளம் உள்ளதைக் கனவில் பெருமான் தரிசிப்பித்தார். நாயனுர் மிக அஞ்சி மனைவியாரை அழைத்துவந்தார். வழக்கம் போல் சிவபூசனைசெய்தார். திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருவருளையும் பெற்ருர். அவரது பதிகத்திலும் வைத்துப் பாராட்டப்பட்டார். அவரது திருக்கல்யாணசமயத்திலே அவர் திருஞானசம்பந்தரைச் சேவித்துச் சிவபதம் அடைந்தார். மருத்துவனுயினுன் ஆதுரன்மாட்டு நிகழ்கின்றநோயை அதன் குறிகளான் இன்னது என்று துணிந்து, பின்னர் அது வருதற் காரணத்தை ஆராய்ந்து தெளிந்து, பின் அது தீர்க்கும் உபாயத்தினை அறிந்து, அதனைச்செய்யும்வழிப் பிழையாமற்செய்க எனத் திருவள்ளுவர் கூறியருளியமை கருதத் தக்கதாம் என்க.

'காரணம் உணவு செயல் என முற்கூறிய இரண்டும்; அவற்றை ஆயுள்வேதமுடையார் நிதானம் என்ப. அவை நாடுதற்பயன் நோயினையும் வாயினையும் ஐயமறத் துணிதல். மருந்துசெய்தல், உதிரங்களைதல், அறுதல், சுடுதல் முதலிய செயல்களெல்லாம் அடங்குதற்கு அது தணிக்கும்வாய் என்ருர். பிழையாமை - பழையமருத்துவர் செய்துவருகிற முறை தப்பாமை' எனப் பரிமேலழகர் விளக்கம் கூறினர்.

நாதர் - பெருமான். சலம் - வைரம். முதல் - காரணம். தணிக்கும்வாய் - தீர்க்கும் உபாயம்.

*குறள் அதி - 95, மருந்து 8.*

## நமிநந்தியடிகணுயனுர்

நக்கமணர் வெள்கநமி நந்திஆ ரூரர்க்கு
மிக்கபுன லாலே விளக்கெரித்தார் - தக்கமனத்(து)
எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார்
திண்ணியர் ஆகப் பெறின். (34)

நமிநந்தியடிகள் சோழநாட்டிலே ஏமப்பேறூரிலே பிராமணர் குலத்திலே அவதரித்தவர்; சிவவழிபாட்டிலே பேரன்பு கொண்டவர். திருவாரூரிலே சிவபெருமான் கட்டளைப்படியே சமணர்கள் நாணும்படி நீரையே நெய்யாகக் கொண்டு நாடோறும் அரநெறி என்னும் ஆலயத்திலே தீபப்பணிவிடையும் செய்துவந்தார். திருவாரூர்ப் பிறந்தார்கள் அனைவரும் சிவகணங்களே எனத் தரிசிப்பித்தார் இறைவர். அது முதல் நாயனரும் திருவாரூரிலேயே தங்கிச் சிவபூசை சிவதரிசனம் முதலியன செய்து வந்தார். திருநாவுக்கரசு சுவாமிகளால் தொண்டர்களுக்கு ஆணிப்பொன் என்று தேவாரத்திலே வைத்துப் பாராட்டப்பெற்றார். தாம் எய்த எண்ணியபொருள்கள் எல்லாவற்றையும் அவ்வெண்ணியவாறே எய்துவர், எண்ணியவர் அவற்றிற்கு வாயிலாகிய வினைக்கண் திண்மையுடையராகப் பெறின் என்று கூறினர் வள்ளுவநாயனுர்.

நக்கு - சிரித்து. எண்ணிய - கருதியபொருள்கள். எய்துப - அடைவர்.

குறள் அதி - 67, வினைத்திட்பம் 6.

ஆரூறு கட்டாரை ஆறணையா வாறுபெரு
காரூறு காட்டநடந் தாரூரர் - பேருனர்
வெள்ளத் தனைய இடும்பை அறிவுடையான்
உள்ளத்தின் உள்ளக் கெடும். (35)

தத்துவங்கள் முப்பத்தாறனையும் தலையெடாமல் அடக்கிய பெருமையையுடையவர் சுந்தரமூர்த்தி நாயனர். சேரமான் பெருமாள் நாயனரும் சுந்தர மூர்த்தி சுவாமிகளும் திருவையாற்றைத் தரிசிக்க விரும்பிச்சென்றனர். காவிரிவெள்ளம் கரைபுரண்டு சென்றது. காவிரிநீர் வழி விலகிக்கொடுக்குமாறு "ஐயாறுடைய அடிகளோ" எனப் பதிகம்பாடி விண் ணப்பித்தார். சிவபெருமான் நீரை விலகும்படி பணித் தார். தம்பிரான்தோழர் சேரர்பெருமானுடன் ஐயா றப்பரைத் தரிசித்துப் பேரானந்தம்பெற்றார். வெள்ளம் போலக் கரையிலவாய இடும்பைகளெல்லாம், அறி வுடையவன் தன் உள்ளத்தான் ஒன்றினை நினைக்க, அத்துணையானே கெடும் எனத் திருவள்ளுவநாயனர் அருளிச்செய்தமை காண்க.

ஆறு ஆறு - முப்பத்தாறு. பெருகு ஆறு - நீர் பெருகிய நதி. ஆறு காட்ட - வழிகாட்ட. இடும்பை - துன்பம். உள்ள - நினைக்க.

*குறள் அதி - 63, இடுக்கணழியாமை 2.*

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனர்

*வால வயதில் வளர்புகலிப் பிள்ளையார்*
*போல விசயம் புரிந்தவரார் - ஞாலமிசைத்*
*தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்*
*தோன்றலின் தோன்றாமை நன்று.* (36)

சீகாழிப்பதியில் அந்தணர் குலத்திலே கௌணிய கோத்திரத்தில் அவதரித்தவர் சம்பந்தப்பிள்ளையார். மூன்று வயதிலே உமாதேவியார் பொற்கிண்ணத்திலே

கறந்தளித்த திருமுலைப்பாலைக் குடித்துச் சிவஞான சம்பந்தராயினர். சிவானந்த மேலீட்டால் சிவதலங்க டோறும் சென்று தரிசித்துத் தேவாரத் திருப்பதிகங் களை அருளிச்செய்தார். பரசமயகோளரியாக விளங்கி யருளினர். பற்பல அற்புதங்களால் சைவசமயத்தை நாடெங்கும் பரப்பினர். ஆகவே திருஞானசம்பந்த ரைப்போல வெற்றியுடன் விளங்கியவர் உலகத்திலே வேறு யாவர் தாம் உளர்? ஆகலின், மக்களாய்ப் பிறக்கின் புகழுக்கு ஏதுவாகிய குணத்தோடு பிறக்க; அக்குணமில்லாதார் மக்களாய்ப் பிறத்தலைக் காட்டி லும் விலங்காய்ப்பிறத்தல் நன்று என்ருர் திருவள்ளுவ நாயனர்.

வாலவயது - இளமைப்பருவம். புகலி என்பது சீகாழிப்பதியின் திருப்பெயர்களுள் ஒன்று. விசயம் - வெற்றி. ஞாலம் - உலகம். தோன்ருமை - மக்களாகப் பிறவாமை.

*குறள் அதி - 24, புகழ் 6.*

*பண்ணுர் பசுந்தமிழ்ச்சம் பந்தரெதிர் வந்தமணர்*
*என்ணு யிரம்கழுவில் ஏறினுர் - ஒன்ணுது*
*வில்லேர் உழவர் பகைகொளினும் கொள்ளற்க*
*சொல்லேர் உழவர் பகை.* (37)

நாளும் இன்னிசையால் தமிழ்பரப்பிய ஞானசம் பந்தர் பாண்டிநாட்டை அடைந்தருளினர். சமணர் கள் அவருக்குப் பல துன்பம் விளைவித்தனர். பிறகு தங்கள் சபதப்படியே சமணர் எண்ணுயிரவரும் கழுவி லேறி உயிர் துறந்தனர். ஆலவாய் அவிர்சடைக் கடவுளின் அருளாலே உடற்கூனும் அறிவுக்கூனும்

நிமிர்ந்த பாண்டியன் சைவனுயினுன். நாடுமுழுவதும் சைவசமயம் வளர்ந்தோங்கியது. ஒருவன், வில்லை ஏராகவுடைய உழவரோடு பகைகொண்டானுயினும், சொல்லை ஏராகவுடைய உழவரோடு பகைகொள்ளா தொழிக என்ருர் திருவள்ளுவனுர்.

வில் ஏர் உழவர் - வில்லை ஏராகக்கொண்டு உழுகின்ற யுத்தவீரர்கள். சொல் ஏர் உழவர் - புலவர். சொல் ஆகுபெயராய் நீதிநூலை உணர்த்திற்று.

*குறள் அதி - 88, பகைத்திறந்தெரிதல் 2.*

*முத்தமிழ்ஞா னத்தலைவர் முன்னம் பகைசாரப்*
*புத்தனெதிர் நின்றிடியில் பொன்றினுன் - இத்திறம்என்*
*கூற்றத்தைக் கையால் விளித்தற்ருல் ஆற்றுவார்க்(கு)*
*ஆற்ருதார் இன்னு செயல்.* (38)

இயற்றமிழ் இசைத்தமிழ் நாடகத்தமிழ் என்னும் முத்தமிழ் ஞானவிரகராகிய திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் பாண்டிநாட்டிலே சைவசமயத்தை நிலை பெறச்செய்து, முறையே சிவதலங்களை எல்லாம் வணங்கிப் போற்றித் தேவாரத்திருப்பதிகங்கள் அங்கங்கே அருளிச்செய்வாராயினர். பின்னர் சோழநாட்டிற்குவந்து பலதலங்களையும் வணங்கித் திருத்தெளிச்சேரியையும் வணங்கினுர். போதிமங்கையை அணுகும் போது சிவனடியார்கள் அரஅர முழக்கத்துடன் பரசமய கோளரியை, பலவகை வாத்தியங்கள் ஒலிக்க எதிர்கொண்டு சென்றனர். திருச்சின்னங்கள் ஊதப் பட்டன. அதனைப் பொருத சாக்கியர் புத்தநந்தியை முற்கொண்டு தடுத்து வாதுக்கழைத்தனர். அதைக்

கண்ட திருப்பதிகம் எழுதுகின்ற திருத்தொண்டர் "அத்திரம் ஆவன ஐந்தெழுத்துமே" என்னும் திருக் குறிப்பு அமைந்த திருப்பாட்டை எடுத்தோதிப் புத்தநந்திதலையில் இடிவிழச் சபித்தனர். அத்திரவாக் கால் புத்தநந்திதலை அறுபட்டமை கண்டு அடியார்கள் எல்லோரும் குதுகலித்துப் பெருமுழக்கம் செய்தனர். பெருமை அறிவு முயற்சி என்னும் மூவகை ஆற்றலும் உடையாருக்கு அவை இல்லாதார் தாம் முற்பட்டு இன்னாதவற்றைச் செய்தல் தானேயும் வரற்பாலன் ஆய கூற்றுவனை அதற்கு முன்னே கைகாட்டித் தம்மிடத்து அழைத்தாலொக்கும் என்றார் வள்ளுவர்.

தலைவர் என்றது திருஞானசம்பந்தசுவாமிகளை. கூற்றம் - இயமன். விளித்தற்று - அழைத்தலை ஒக்கும். ஆற்றாதார் - வலியில்லாதார்.

*குறள் - அதி 90, பெரியாரைப்பிழையாமை 4.*

*ஏறியஓ டக்கோல் இசைஞானச் செந்தமிழால்*
*ஆறுகடந் தார்தோணி யார்மகனார் - விறடங்கா*
*வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்*
*உள்ளத் தனைய துயர்வு.* (39)

ஆன்மாக்களுக்குத் தோன்றாத் துணையாயிருந்து திருவருள் செய்யும் சிவபெருமான் எழுந்தருளியுள்ள தலங்களைத் தரிசிக்கும் பெருவிருப்புடையராய்த் திரு ஞானசம்பந்தப் பிள்ளையார் 'கொட்டமே கமழும் கொள்ளம்பூதூ'ருக்குச் சமீபமாக எழுந்தருளினர். அங்கே முள்ளிவாய்க்கரையை அடைந்தார். ஆறு மிகப்பெருக்கெடுத்து ஓடுதலால் ஓடக்கோல் நிலைக்க வில்லை. அதனால் ஓடக்காரர்கள் கரையிலே ஓடத்தை

நிறுத்திவிட்டுப்போயினர். ஞானசம்பந்தப்பிள்ளையார் ஓடத்திலே சிவனடியார்களை ஏற்றி நாவலமே கோலாகக்கொண்டு பதிகம்பாடி அதனைச் செலுத்த, ஓடம் மற்றக்கரையையடைந்தது. திருத்தோணியப்பர் திருமகனாராகிய சம்பந்தர் சிவபெருமானைத் திருத்தொண்டர்களுடன் தரிசித்திருந்தனர் என்பது வரலாறு. நின்ற நீரின் அளவினவாம் நீர்ப்பூக்களின் தாளினது நீளங்கள்; அதுபோல் மக்களுடைய ஊக்கத்தினது அளவினதாம் அவர் உயர்ச்சி எனத் திருவள்ளுவநாயனார் ஊக்கமுடைமை என்னும் அதிகாரத்தில் சொல்லிவைத்தார்.

நீர் மிக்கதுணையும் மலர்த்தாள் நீளும்; ஊக்கம் மிக்கதுணையும் மக்கள் உயர்வர் எனப் பரிமேலழகர் குறித்தமையும் காண்க.

தோணியார் - சீகாழியிலுள்ள திருத்தோணியப்பர். மகனார் என்றது திருஞானசம்பந்தசுவாமிகளை.

*குறள் அதி - 60, ஊக்கமுடைமை 5.*

*கணவனெனக் காதலியைக் காழியர்கைப் பற்றி*
*மணவறைச சன்கழலாய் வாழ்ந்தார் - குணமே*
*தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி*
*வலைப்பட்டார் மற்றை யவர்.* (40)

காழிப்பிள்ளையாராகிய திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள், தம்முடைய பிதாவாகிய சிவபாதவிருதயர் சுற்றத்தார் முதலியோர் வேண்டுகோளுக்கு இசைந்து திருநல்லூரில் இருக்கின்ற பிராமணருள் நம்பாண்டார் நம்பி என்பவரின் புத்திரியை மணந்தார். மணத்தில் விபூதி உருத்திராக்கதாரணராய்த் திருவைந்தெழுத்தினை

ஓதிக்கொண்டுவந்த திருமணக்கோலத்துடனே அவர் வேதவிதிப்படி வளர்க்கப்பட்டஅக்கினியை, 'அக்கினி யாவார் பரமசிவனே' எனத் திருவுளங்கொண்டவராய் வலம்வந்தார்; 'இந்த இல்லொழுக்கம் வந்து சூழ்ந்ததே நான் இவளோடு சிவபெருமானது திருவடியை அடை வேன்' என உறுதி பூண்டார். திருப்பெருமணம் என்னும் சிவாலயத்தை மனைவியாரோடு அடைந்தார். 'நீயும் உன் மனைவியும் உன்னுடைய விவாகத்தைக் காணவந்தவர்கள் எல்லோரும் இந்தச் சோதியின் உள்ளே புக்குவந்து நம்மை அடையுங்கள்' எனச் சிவபெருமான் அருளிச்செய்தவாறே சோதிவடிவாய் நின்ற கடவுளை வணங்கித் துதித்தார். 'காதலாகிக் கசிந்து' என்னும் நமச்சிவாயத் திருப்பதிகத்தை யாவரும் கேட்க அருளிச்செய்தார். பிள்ளையாருடைய திருமணத்தைத் தரிசிக்கவந்த எல்லோருடனும் திரு நீலநக்கநாயனர், முருகநாயனர், சிவபாதவிருதயர், நம்பாண்டார்நம்பி, திருநீலகண்டப் பெரும்பாணர் முதலியோருடனும் சித்தாந்தசைவசமயாசாரியராகிய திருஞானசம்பந்தமூர்த்திநாயனர் தம்முடைய மனைவி யாரைக் கைப்பற்றிக்கொண்டு, அந்தச் சோதியை வலஞ்செய்து, அதனுள்ளே புகுந்து, சிவசாயுச்சியம் அடைந்தார். முற்றத்துறந்தார் வீட்டினைத் தலைப் பட்டார்; அங்ஙனம் துறவாதார் மயங்கிப் பிறப்பாகிய வலையுட்பட்டார் என்றார் வள்ளுவர்.

காழியர் - சீகாழிப்பதியில் அவதரித்த திருஞான சம்பந்தசுவாமிகள். தீர - முழுவதும். மற்றையவர் - முழுதும் துறவாதவர். வலை - பிறப்பாகிய வலை.

குறள் அதி - 35, துறவு 8.

## ஏயர்கோன்கலிக்காமநாயனர்

*ஈசனையாள் வாராம்வந் தென்னையாள் வாரென்று*
*காசினியின் மாண்டார் கலிக்காமர் - பேசின்*
*மருந்தோமற் றூனேனும்பும் வாழ்க்கை பெருந்தகைமை*
*பிடழிய வந்த இடத்து.* (41)

ஏயர்கோன் கலிக்காமநாயனர் சோழநாட்டிலே திருப்பெருமங்கலத்திலே குரு லிங்க சங்கமபத்திகளில் குறைவில்லாதவராய் வாழ்ந்திருந்தார். அவர் வேளாளர் குலத்தவர்; ஏயர்குடியிலே தோன்றியவர். திருப்புன் கூர்ச் சிவாலயத்திலே பல திருப்பணிகளையும் செய்தவர். இல்லறத்திலேயே இருந்தவர். சுந்தரமூர்த்தி சுவாமிகள் சிவபெருமானைப் பரவையாரிடத்துக்குத் தூதாக அனுப்பிய செய்தியைக்கேட்டு மனம்வெம்பிக் கோபித்திருந்தார். அவரைக் காணுதலும்கூடாது என மனத்தில் உறுதிபூண்டார். அதனை உலகத்தார் அறியச் செய்யச் சிவபெருமான் கலிக்காமருக்குச் சூலையை அருளினர். 'சுந்தரனலன்றி இந்நோய் தீராது' என்று அருளிச்செய்தார். சுந்தரரைக் கலிக்காமர்பால் போய் நோயைத் தீர்க்கவும் ஏவினர். திருவருளாணையால் சுந்தரர் கலிக்காமர்நோயைத் தீர்க்க அங்கேசென்றுர். சுந்தரர் தம்மிடத்து வருதலையறிந்த கலிக்காமர் உடைவாளினலே தமது வயிற்றைக் கிழித்துக்கொண்டு இறந்துபோனர். மனைவியார் அதனை மறைத்துவைத்ததை அறிந்த சுந்தரரும், இரத்தம் சோரக் குடர் சொரிந்து உயிர்பொன்றிக்கிடந்த நாயனரைக்கண்டு நானும் இவரைப்போல இறந்துபோவேன் என்று சொல்லி உடைவாளை எடுக்க, உடனே பரமசிவனது திருவருளினல் கலிக்காமர் உயிர்த்தெழுந்தார்; அவர்

கையில் உள்ள வாளைப்பிடித்துக்கொண்டார்; உடன் விழுந்து வணங்கினுர். கலிக்காமரும் சுந்தரரும் ஒருவர் ஒருவரை வணங்கி மகிழ்ச்சியுடன் நண்பு பூண்டிருந் தனர். உயர்குடிப்பிறப்புத் தன் வலியாகிய மானம் அழியவந்துழி இறத்தல் ஒழிந்து, பயனில்லாத உடம் பினைக் காக்கும் வாழ்க்கை பின்னும் இறவாமைக்கு மருந்தாமோ என்றருளினர் வள்ளுவர்.

காசினி - உலகம். மாண்டார் - இறந்தார். பீடு - மானம். ஊன் என்றது உடம்பினை.

*குறள் அதி - 97, மானம் 8.*

## திருமூலநாயனுர்

*பரகாயம் சேர்ந்தார் பசுக்களால் ஆய்ச்சி*
*மருவாமல் மாதவமே வாய்ந்தார் - திருமூலர்*
*ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்*
*தாழா துஞற்று பவர்.* (42)

திருக்கயிலாயமலையிலே திருநந்திதேவருடைய மாணுக்கர்களில் சிவயோகி ஒருவர் பொதியில் அகத் தியரைக்காண வேணவாவுற்ருர். திருக்கயிலாயத்தை அகன்று வழிக்கொண்டார்; திருக்கேதாரம், பசுபதி நேபாளம், காசி, சீசைலம், திருக்காளத்தி, திருவாலங் காடு, காஞ்சீபுரம், திருவதிகை, சிதம்பரம் முதலிய தலங்களை வணங்கித் திருவாவடுதுறையை அடைந்து சிவதரிசனம் செய்திருந்தார். திருவாவடுதுறையை அடுத்துள்ள சாத்தனுரின் அருகிலே பசுக்கள் கூடி, அங்கே இறந்துகிடந்த மேய்ப்போன் ஆகிய மூலன் உடலைச் சுற்றிச்சுற்றிக் கதறுவதைக்கண்டார். மனம்

இரங்கினர். மூலன் மாண்ட உடம்பில் தான் 'பரகாயப் பிரவேச'த்தால் புகுந்தார். எழுந்து, பசுக்கள் மனம் துன்புறுமல் மகிழச்செய்தார். பின்பு நன்ருக மேய்த்துப் பசுக்களின் பின்பே சென்று அவைகள் வீட்டிற் புகத் தாம் வெளியேநின்ருர். மூலன்மனைவி கிட்டிவர அவளைத் தொடாமல் 'உனக்கு என்னேடு யாதொரு சம்பந்தமுமில்லை' என மறுத்தார். ஊரார் உண்மையை உணர்ந்தனர். மூலர் மறுநாள் சென்று சேமித்த இடத்தில் தமது உடலைக் காணுமையால் திருவருட்செயல் இது எனத் தேர்ந்தார். மூலர் மூவாயிரம் ஆண்டுகள் திருவாவடுதுறையிலே அரசின்கீழ் சிவயோகத்தில் அமர்ந்திருந்தார். மூவாயிரம் திருமந்திரங்களை அருளிச் செய்தார். பயனை விலக்குவதாய ஊழினையும் புறங் காண்பர்; அவ்விலக்கிற்கு இளையாது வினையைத் தாழ்வற முயல்வார் எனத் திருவள்ளுவர் கூறியமை காண்க.

பரகாயம் - மறுகூடு; ஒருடம்பைவிட்டு மற்ருேர் உடம்பில் புகுதல். ஆய்ச்சி - இடைச்சி; என்றது மூலனுகிய இடையன் மனைவியை. உலைவின்றி - இளையாது. உஞற்றுபவர் - முயல்வார்.

*குறள் அதி - 62, ஆள்வினையுடைமை 10.*

## தண்டியடிகணுயனுர்

*அந்தகனென் றேசும் அமணரந்த ராயொழியத்*
*தந்தமொழி சாதித்தார் தண்டியார் - முந்தமொழி*
*சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம்*
*சொல்லிய வண்ணம் செயல்.* (43)

சோழநாட்டிலே திருவாரூரிலே தண்டியடிகள் நாயனர் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் பிறவிக் குருடர். அகக்கண்ணினுலே சிவவழிபாடு செய்பவர். பஞ்சாக்கரத்தை எப்போதும் செபித்துவரும் நியமம் உடையவர். அவர் திருவாரூர்ப் பூங்கோயிலுக்கு மேற்கில் உள்ள திருக்குளத்தைத் திருப்பணிசெய்ய எண்ணினர். அவ்வாறு திருப்பணி செய்யும்போது சமணர்கள் இந்நாயனுரைக் குருடு என்றும் செவிடு என்றும் பலவாறுகூறி இகழ்ந்தனர்; திருப்பணிக்குப் பல இடையூறும் விளைத்தனர். அதனுல் மனம்நொந்து நான் இவர்கள்முன் கண்பெறுவேன்; இவர்கள் கண்ணிழப்பக் காணுவேன் எனச் சபதம் செய்தார். சிவபெருமானிடம் முறையிட்டார்; சிவபெருமான் அருளால் நாயனர் விழிபெற்ருர். சமணர்கள் கண்ணிழந்து கருத்தும் இழந்து தடுமாறினர். அரசன் ஆணையால் அவர்கள் அந்த நகரினின்று துரத்தப்பட்டார்கள். தண்டியடிகள் துன்பம்நீங்கிப் பரமசிவனைத் தியானித்து வழிபட்டுப் பஞ்சாக்கர செபம் செய்து கொண்டிருந்து, பல திருத்தொண்டுகளையும் செய்து சிவபதம் அடைந்தார். யாம் இவ்வினையை இவ்வாற்ருற்செய்தும் என நிரல்படச் சொல்லுதல் யாவர்க்கும் எளிய; அதனை அவ்வாற்ருனே செய்தல் யாவர்க்கும் அரியவாம் எனத் திருவள்ளுவர் பணித்தருளியமையும் காணற்பாலது.

அந்தகன் - குருடன். அந்தராய் - குருடராய். தந்தமொழி - சொல்லிய சொல்.

குறள் அதி - 67, வினைத்திட்பம் 4.

## மூர்க்கநாயனார்

உருளாய மும்பொன் உதவுதல்மூர்க் கர்க்கே
பொருளாயம் மற்றவர்க்கே போக்கும் - அருளாம்
அறத்தினூஉங் காக்கமும் இல்லை அதனை
மறத்தலின் ஊங்கில்லை கேடு. (44)

தொண்டைநாட்டிலேஉள்ள திருவேற்காட்டிலே, வேளாளர் குலத்திலே தலைமை பெற்றவர் ஒருவர் இருந்தார். சிவனடியார்களைச் சிவனெனவேகொண்டு நாடோறும் வணங்கித் திருவமுது செய்வித்துத் தாம் உண்ணும் நியமம் உடையவர். அவர் வேண்டும் பொருள்களையும் கொடுத்துவந்தார். நாளடைவில் அவரிடமுள்ள பொருள்களெல்லாம் அடியார்கட்கு அமுதருத்திவந்தமையால்செலவாகிவிட்டன. அடிமை நிலம் முதலியவற்றையும் விற்று அவர் மாகேசுர பூசையை மனமகிழ்வுடன் வழுவாமல் செய்துவந் தார். அதன் பின்பு மாகேசுரபூசையைச் செய்தற்குப் பொருள் இல்லாமையால் தாம் முன்பு கற்றிருந்த சூதாட்டத்தினால் பொருள் சம்பாதிக்க நினைத்தார். அவ்வூரில் சூதாடுவோர் இன்மையால் அவ்வூரை அகன்றார். அவர் சிவதலங்கள்தோறும்சென்று சுவாமி தரிசனம் செய்தார். அங்கங்கே சூதாடலால் வரும் பொருளைக்கொண்டு மாகேசுரபூசையை நடத்திவரு பவர் ஆனார். கும்பகோணத்தைச் சேர்ந்தார். அங்கே சூதாடிப் பொருள்தேடித் தம் நியமத்தைச் சரிவர நடத்தினார். சூதிலே மறுத்தவர்களை அவர்உடைவாளை உருவிக் குத்துவார். அதனால் நற்சூதர், மூர்க்கர் என் னும் பெயரையும் பெற்றார். அடியார்கள் திருவமுது செய்தபின்பு தாம் கடைப்பந்தியிலேயே உண்பார்.

இவ்வாறு சிலகாலம் செய்திருந்து அப்பெருஞ் சிவ புண்ணியத்தினுலே சிவபதம் அடைந்தார். ஒருவனுக்கு அறஞ்செய்தலின் மேற்பட்ட ஆக்கமும் இல்லை; அதனை மயக்கத்தால் மறத்தலின் மேற்பட்ட கேடும் இல்லை என்ருர் திருவள்ளுவர்.

மற்றவர்க்கே பொருள் ஆயம் போக்கும் என மாற்றுக. பொருள் - உள்ளபொருள். அதனை - அந்த அறத்தினை.

*குறள் அதி - 4, அறன்வலியுறுத்தல் 2.*

## சோமாசிமாறநாயனுர்

*சோமாசி மாறனுர் சுந்தரரால் யாகமினி(து)*
*ஆமா றரனை அழைப்பித்தார் - ஆமாம்*
*பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின்*
*அதுநோக்கி வாழ்வார் பலர்.* (45)

சோழமண்டலத்திலே, திரு அம்பரிலே, அந்தணர் குலத்திலே, சோமாசிமாறநாயனுர் என்பவர் ஒருவர் இருந்தார். இவர் திருவைந்தெழுத்தை அன்பினேடு செபித்துவரும் நித்த நியமம் உடையவர். எக்குலத்தினராயினும் எக்குணமுடையராயினும் சிவபத்தியுடையராயின் அவரே நம்மை ஆளுடையார் என்னும் உறுதியான மெய்யறிவுடையவர். அடியவர்கள் தம் வீட்டுக்கு வந்தால் அவர்களை எதிர்கொண்டு வணங்கித் திருவமுது செய்விப்பவர். சிவபிரானுக்குப் பிரீதியாகிய யாகங்களைப் புகழ் கருதாமலும் பயன் கருதாமலும் நிட்காமியமாக வேதவிதிப்படி செய்பவர். இவர் திருவாரூரிற்சென்று, சைவசமயாசாரியராகிய

சுந்தரமூர்த்திநாயனுரை அடைந்து, அவர் திருவடிகளிலே பத்திபண்ணினுர். இவர் இயற்றிய யாகத்திலே சிவபெருமான் நேரே அவிர்ப்பாகத்தை ஏற்றருளினர். அதனுலே நாயனுர் சிவபதத்தைப்பெற்ருர். எல்லாரையும் ஒரு தன்மையராக நோக்காது அரசன் தத்தம் தகுதிக்கு ஏற்ப நோக்குமாயின் அச்சிறப்புநோக்கி அவனை விடாது வாழும் சுற்றத்தார் பலர் என்ருர் திருவள்ளுவநாயனுர்.

வரிசை - தகுதி. வாழ்வார் என்றது சுற்றத்தார்களை.

*குறள் அதி - 53, சுற்றந்தழால் 8.*

## சுந்தரமூர்த்திநாயனுர்

*பொருட்டுறையுன் பாட்டேநற் பூசையென்ருர் ஊரர்க்(கு)*
*அருட்டுறையார் அன்புசெய்வார் ஆனுர் - மருட்டேர்*
*செவிக்குணா வில்லாத போழ்து சிறிது*
*வயிற்றுக்கும் ஈயப் படும்.* (46)

சுந்தரமூர்த்திசுவாமிகளை அடிமையோலைகாட்டி ஆட்கொள்ளுமாறு திருவெண்ணெய்நல்லூரிலே திருவருட்டுறையிலே சென்று அற்புதக்காட்சி அளித்தருளினர் சிவபிரான், "நீ நம்மோடு வன்சொற்களைச் சொல்லி வன்ருெண்டன் என்கிற பெயரைப்பெற்ருய்; நமக்கு அன்பினேடு செய்யத்தக்க அருச்சனையாவது பாடலேயாம். ஆதலால், நம்மேலே தமிழ்ப் பாட்டுக்களைப்பாடு" என்று மேலும் அருளிச்செய்தார். சுந்தரர் வணங்கி 'அருட்பெருங் கடவுளே! தேவரீருடைய அநந்தகுணங்களில் எதையறிவேன்? என்ன சொல்லிப்

பாடுவேன்' என்ருர். அதற்குக் கடவுள் 'நீ முன்னே என்னைப் பித்தன் என்று சொன்னுய் ஆகையால் என்பெயர் பித்தன் என்றே பாடு' என்று சொல்லி யருளினுர். உடனே சுந்தரர் "பித்தா பிறைசூடீ" என்னும் சொற்ருெடரை முதலாகக்கொண்ட திருப் பதிகத்தைப் பாடியருளினர். சிவபிரான் மகிழ்ந்து "தொண்டனே! நீ இன்னும் நம்முடைய புகழைக் குறித்துப் பலவகையாகப் பாடு" என்றருளினுர். அக் கட்டளையின்படியே சுந்தரர் பல தலங்கட்குஞ்சென்று தேவாரத்திருப்பதிகம் அருளிச்செய்தார். பற்பல அற் புதங்களையும் நிகழ்த்தினர். செவிக்கு உணவாகிய கேள்வி இல்லாதபொழுது வயிற்றுக்கும் சிறிது உணவு இடப்படும் என்றருளினர் திருவள்ளுவநாயனுர்.

பொருள் என்றது அகப்பொருள் புறப்பொருள் களை. அருட்டுறை என்பது திருவெண்ணைநல்லூர்ச் சிவாலயத்தின் பெயர். மருள்தேர் - மயக்கத்தினின்றும் தெளிந்த. "அர்ச்சனை பாட்டேயாகும் ஆதலால் மண் மேல் நம்மைச் சொற்றமிழ் பாடுகென்ருர் தூமறை பாடும் வாயார்" என்ற பெரியபுராணத் திருப்பாடற் பகுதி ஈண்டு நினைவுக்குரியது.

*குறள் அதி - 42, கேள்வி 2.*

## சாக்கியநாயனுர்

*அங்கசன்பூ எல்லாம் அடுகணையே சாக்கியர்கைச்*
*செங்கலெலாம் சங்கரற்குத் தேமலரே - செங்கேழ்க்*
*கணை கொடிநி யாழ்கோடு செவ்விதாங் கன்ன*
*வினைபடு பாலால் கொளல்.* (47)

மன்மதன் சிவபெருமான்மேல் இட்டதெல்லாம் மலராயிருந்தும் அவை அவன் மரணத்துக்குக் காரண மாயிற்று. காஞ்சிபுரத்திலே பௌத்த சமயத்தைச் சார்ந்திருந்தும் அறிவிக்க அறியும் சித்தாகிய ஆன்மாக் களும், அவ்வான்மாக்களினுலே செய்யப்படும் சட மாகிய புண்ணியம் பாவம் என்னும் கன்மங்களும், அந்தக்கன்மங்களாலே பெறப்படும் சுகம் துக்கம் என்னும் பயன்களும், அப்பயன்களைக் கொடுக்கின்ற தானேயறியும் சித்தாகிய பதியும் எனப் பொருள்கள் நான்கு என்றும், அவற்றை உண்மையாக உணர்த்தும் நூல்கள் சைவசமய நூல்களே என்றும், அந்நூல் உணர்த்தும் பதி சிவபெருமானே என்றும் திருவரு ளாலே நன்குயறிந்து உறுதிபூண்டார் சாக்கியர். எந்த நிலையிலே நின்ருலும் எந்த வேடத்தை எடுத்தாலும் பரமசிவனுடைய திருவடிகளை மறவாமையே பொரு ளெனக் கருதினுர். தாம் முன்பு சார்ந்த பௌத்தமத வேடத்தைத் துறவாமல் பரமசிவனை மிக்க பேரன் புடன் இடைவிடாது தியானித்து வருவாராயினுர். நாடோறும் சிவலிங்க தரிசனம்செய்தே போசனம் பண்ணல்வேண்டும் எனவும் விரும்பினுர். அதனுல் அருகில் ஓர் வெள்ளிடையில் இருந்த சிவலிங்கத்தைத் தரிசித்துப் பேரானந்தம்கொண்டார். இன்னதென்று செய்வதறியாமல் கீழேகிடந்த செங்கல்லை எடுத்துப் பதைப்புடன் சிவலிங்கத்தின்மேல் எறிந்தார். 'எல்லாம் சிவன் செயல்' எனத் தெளிந்தமையால் தனக்கு இவ் வெண்ணம்வந்தது பரமசிவனது திருவருளே எனத் துணிந்தார். அங்ஙியமத்தை நாடோறும் வழுவாமல் செய்துவந்தார். அச்செயல் இறைவருக்கு அன்றலர்ந்த மலரிட்டுச்செய்யும் அருச்சனையாயிற்று. அம்பானது

வடிவால் செவ்விதாயினும் செயலால் கொடிது; யாழ் கோட்டால் வளைந்ததாயினும் செயலால் செவ்விது; அவ்வகையே தவம் செய்வோரையும் கொடியர் செவ்வியர் என்பது வடிவால் கொள்ளாது அவர் செயல்பட்ட கூற்றுனே அறிந்துகொள்க என்றூர் திருவள்ளுவர்.

அங்கசன் - மன்மதன். அடு கணை - கொல்லுகின்ற அம்பு. கோடு - வளைவு. "ஈசற்கு, நல்லோன் எறிசிலையோ நன்னுதால் ஒண்கருப்பு, வில்லோன் மலரோ விருப்பு" என்ற பாடலை, இங்கு முன் இரண்டு அடிகளோடு ஒப்பிட்டுக்காண்க.

*குறள் அதி - 28, கூடாவொழுக்கம் 9.*

## சிறப்புலிநாயனுர்

*எய்தமகிழ்ந் தின்சொலுரைத் தீசனடி யார்க்கிதமே*
*செய்தனமே செய்தார் சிறப்புலியார் - வெய்துற்றூர்*
*மோப்பக் குழையும் அனிச்சம் முகம்திரிந்து*
*நோக்கக் குழையும் விருந்து.* (48)

சோழநாட்டிலே, ஆக்கூரிலே, அந்தணர் குலத்திலே சிறப்புலிநாயனுர் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் சிவனடியார்கள் எழுந்தருளி வந்தபொழுது, அவர்களை வணங்கி, மகிழ்வினுல் இன்சொற்களைச் சொல்லி, அவர்களைத் திருவமுது செய்வித்து அவர்களுக்கு வேண்டும் திரவியங்களையும் கொடுப்பவர். பஞ்சாக்கரத்தை மிகுந்த பத்தியோடு செபிப்பவர். பரமசிவனைக் குறித்து யாகங்கள் செய்பவர். அவர்

இன்னும் பல சிவபுண்ணியங்களைச் செய்துகொண் டிருந்து சிவபதம் அடைந்தார். அனிச்சப்பூ மோந்துழி யன்றிக் குழையாது; விருந்தினர் முகம்வேறுபட்டு நோக்கக்குழைவர் என்றார் வள்ளுவர்.

சேய்மைக்கண் கண்டுழி இன்முகமும், அதுபற்றி நண்ணியவழி இன்சொல்லும், அதுபற்றி உடன்பட்ட வழி நன்றாற்றலும் என விருந்தோம்புவார்க்கு இன்றி யமையாதன மூன்றனுள் முதலாய இன்முகம் இல் வழிச் சேய்மைக்கண்ணே வாடி நீங்குதலின், தீண்டிய வழியல்லாது வாடாத அனிச்சப்பூவினும் விருந்தினர் மெல்லியர் என்பதாம். இதனால் விருந்தோம்புவார்க்கு முதற்கண் இன்முகம் வேண்டும் என்பது கூறப்பட் டது என உரைவிளக்கம் கூறினர் பரிமேலழகர்.

இதம் - இன்பம். அனம் - அன்னம்; திருவமுது. திரிந்து - மாறுபட்டு. விருந்து - விருந்தினர்.

*குறள் அதி - 9, விருந்தோம்பல் 10.*

## சிறுத்தொண்டநாயனார்

*காய்க்கறிவே றென்றுதொடாக் கள்ள வயிரவர்க்கோர்*
*சேய்க்கறிசெய் திட்டார் சிறுத்தொண்டர் - வாய்க்*
*இன்னு திரக்கப் படுதல் இரந்தவர் [கினிதாய்*
*இன்முகம் காணும் அளவு.* (49)

சோழமண்டலத்திலே, திருச்செங்காட்டங்குடி யிலே, மாமாத்திர குலத்திலே, பரஞ்சோதியார் என் பவர் ஒருவர் இருந்தார். அவர் பரமசிவனே மெய்க் கடவுள் என்றும், அவருடைய திருவடிகளை அடை தலே முத்திநெறி என்றும் தெளிந்தார். இடையறாமல்

சிவபிரான் திருவடிகளையே அன்போடு தியானித்து வந்தார். சிவனடியார்களுக்கு எப்போதும் திருத்தொண்டு செய்பவர். அவர் மனைவியார் திருவெண்காட்டு நங்கையார். பரஞ்சோதியார் அரசன் வேண்டுகோளின்படி அரசகாரியத்தைவிட்டு விடைபெற்றுக்கொண்டு தம்முடைய திருப்பதியிலே கணபதீச்சரத்தில் எழுந்தருளியுள்ள சிவபெருமானுக்குத் திருத்தொண்டுகள் புரிந்துவந்தார். அவருக்குச் சீராளதேவர் என்னும் புத்திரர் அவதரித்தார். பரஞ்சோதியார் இல்லறத்தில் வாழ்ந்திருந்து நாடோறும் முன்னே சிவனடியார்களைத் திருவமுதுசெய்வித்துப் பின் தாம்உண்பார். சிவனடியார்களை மிகுந்த அன்பினோடு வழிபட்டு அவர்கள் திருமுன்பே மிகச் சிறியராய் ஒழுகுகின்றமையால் அவருக்குச் சிறுத்தொண்டர் என்னும் பெயர் நிலைபெற்றது. அவர் அன்புமேலீட்டை உலகத்தினருக்கு அறிவிக்கும்பொருட்டுச் சிவபெருமான் வயிரவகோலம் தாங்கிவந்து அங்கே திருவாத்திமர நிழலில் தங்கியிருந்தனர். சிறுத்தொண்டர் அவரைத் திருவமுதுசெய்ய அழைத்தார். அவர் விரும்பியவாறு தமது ஒரேபுதல்வரைத் தாய் பிடிக்கத் தாம் அரிந்து கறி சமைத்து உண்ண அமைத்தார். வயிரவர் உடன் உண்ண உமது புத்திரனை அழையும் என்றார். அவ்வாறே சிறுத்தொண்டரும் அழைக்கத் திருமகனாரும் ஓடிவந்தனர். வயிரவர் இடபாரூடராய்க் காட்சியளித்துத் தமதுலகத்துக்கு அழைத்துச்சென்றார்.

சேய் - குழந்தை. இன்னது - இன்பம் செய்வது அன்று. இரக்கப்படுதலாவது யாசிப்பவர்க்குக் கொடுப்பேன் என்று இருத்தல்.

குறள் அதி - 23, ஈகை 4.

## சேரமான்பெருமாணுயனுர்

*நெறிவார் சடையரைப்போல் நீள்நிலத்தோர் செய்கை*
*அறிவார் கழறிற் றறிவார் — அறிவாரார்*
*எல்லார்க்கும் எல்லாம் நிகழ்பவை எஞ்ஞான்றும்*
*வல்லறிதல் வேந்தன் தொழில்.* (50)

மலைநாட்டிலே உள்ள மகோதை என்னும் பெயரையுடைய கொடுங்கோளூரிலே, சேரர்குடியிலே பெருமாக்கோதையார் என்பவர் அவதரித்தார். இளம் பிராயத்திலேயே அவர் வைராக்கியமுடையவராய்ச் சிவபெருமானுடைய திருவடியை அடைதல் வேண்டுமெனக் கருதினுர், திருவஞ்சைக்களம் என்னும் சிவதலத்தை அடைந்தார், பரமசிவனே சுவதந்திரர், நாம் பரதந்திரர் என்று உணர்ந்தார். சிவாதீனமாய் நின்றுர். நாடோறும் நியமமுடன் திருத்தொண்டுகளைச் செய்வாராயினுர். அப்போது செங்கோற் பொறையன் என்னும் சேர அரசன் தவஞ்செய்யும் பொருட்டுத் தபோவனத்தை அடைந்தான். மந்திரிமார்கள், திருத்தொண்டுகளைச் செய்திருக்கும் பெருமாக்கோதையாரிடம் வந்து 'இம்மலைநாட்டை நீரே முடிசூடி அரசியற்றல் வேண்டும்' என்று விண்ணப்பித்தனர். பெருமாக்கோதையார் அதனைக் கேட்டு ஆலயத்தினுள்ளே பிரவேசித்தார்; சிவபெருமானை வணங்கி விண்ணப்பித்தார். அவருடைய திருவருளினுலே அவரிடத்தே வைத்த பத்திவழுவாது அரசியற்றும் சத்தியையும். யாரும் யாவும் கழறினவைகள் அனைத்தையும் அறியும் அறிவையும், நாசம் இல்லாத மகா பராக்கிரமத்தையும், பெருங்கொடையையும், அரசருக்கு உரிய படை வாகனம் முதலிய எல்லா

வற்றையும் கைவரப்பெற்ருர்; மீட்டும் இறைவனை வணங்கி விடைபெற்றுப் புறத்தணைந்தார்; முடிசூடி அரசியற்றினுர் சேரமான்பெருமாள். எல்லார்கண்ணும் நிகழ்வன எல்லாவற்றையும் நாடோறும் ஒற்ருன் விரைந்து அறிதல் அரசனுக்கு உரிய தொழில் என்ருர் திருவள்ளுவர் தமது திருக்குறளில்.

வார் - நீண்ட. சடையர் என்றது சிவபெருமானை. வல் - விரைவு.

*குறள் அதி - 59, ஒற்ருடல் - 2.*

*சேரர்கோன் நீநித் திரவியங்கள் சுந்தரர்பால்*
*சோரர் கவர்ந்தொளித்தும் சோர்வுண்டோ - பாரில்*
*அழக்கொண்ட எல்லாம் அழப்போம் இழப்பினும்*
*பிற்பயக்கும் நற்பா லவை.* (51)

சேரமான்பெருமாள்நாயனுருக்குத் தோழர் சுந்தரமூர்த்திநாயனுர். சுந்தரமூர்த்திசுவாமிகள் சேரமான் பெருமாள்நாயனுரோடும் கொடுங்கோளூரிலே சிலநாள் இருந்தபோது திருவாரூர் வன்மீகநாதரைத் தரிசனம் செய்கின்ற நினைவு அவருக்கு முறுகி எழுந்தது. சேரமான்பெருமாள் பிரிவாற்ருதவராய்ச் சுந்தரமூர்த்தி சுவாமிகளைத் திருவாரூக்குப் போகாதபடி தடுத்தார். அதற்குச் சுந்தரமூர்த்திசுவாமிகள் சிறிதும் உடன் பட்டிலர். பின்பு சேரமான் பெருமாள் மிகுதியான பொன்முதலிய திரவியங்களையெல்லாம் ஆட்களின்மீது சுமத்தி அநுப்பச்செய்தார். சுந்தரர் விடைகொடுத்து மலைநாட்டைநீங்கித் திருமுருகன்பூண்டிவழியே ஆரூர் செல்லத் திருவுளங்கொண்டுபோனுர். பரமசிவன் பூத கணங்களை நோக்கி, 'நீங்கள் வேடவடிவம்கொண்டு

சென்று சுந்தரனுடைய பண்டாரங்களைக் கவருங்கள்' என்று ஆணையிட்டருளினர். அவைகள் வழியிலே வேடுவர்களாகித் திரவியங்கள் எல்லாவற்றையும் கவர்ந்து கொண்டு சென்றன. பின்பு சுந்தரர் திரு முருகன்பூண்டியிலே சென்று திருக்கோயிலினுட் பிரவேசித்துச் சுவாமியை வணங்கி "கொடுகு வெஞ் சிலை வடுகவேடுவர்" என்று திருப்பதிகம் எடுத்துத் திருப்பாட்டு இறுதிதோறும் 'எத்துக்கு இங்கிருந்தீர் எம்பிரானிரே' என்று பாடியருளினர். உடனே கடவு ளுடைய திருவருளினாலே அவ்வேடுவர்கள் பறித்த திரவியங்களெல்லாம் வாயிலில்வந்து குவிந்தன. சுந்தரர் மகிழ்ந்து வணங்கி அவைகளை எடுத்துச் சென்றார். ஒருவன் தீயவினைகளைச்செய்து பிறர் இரங்கக்கொண்ட பொருள் எல்லாம் இம்மையிலே அவன்தான் இரங்கப் போகாநிற்கும்; மற்றைத் தூய வினையான் வந்த பொருள்கள் முன்பு இழந்தானாயினும் அவனுக்குப் பின்னர்வந்து பயன்கொடுக்குமென்றார்திருவள்ளுவர்.

சேரர்கோன் - சேரமான் பெருமானாயனார். சோரர்- கள்வர். உண்டோ; ஒகாரம் எதிர்மறை; இல்லை என்றபடி. பின் பயக்கும் - பின் பயனைக்கொடுக்கும். நற்பாலவை - நல்லதொழில்களான் வந்தபொருள்கள்.

*குறள் அதி - 66, வினைத்தூய்மை 9.*

### கணநாதநாயனார்

*நாட்டிலடி யாரையெல்லாம் நாதன் பணிவிடையே*
*காட்டிவாழ் வித்தார் கணநாதர் - வேட்டிவர்தாம்*
*செய்யாமல் செய்த உதவிக்கு வையகமும்*
*வானகமும் ஆற்றல் அரிது.* (52)

சோழமண்டலத்திலே சீர்காழியிலே அந்தணர் குலத்திலே கணநாதநாயனுர் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் திருத்தோணியப்பருக்கு மிகுந்த அன்பினேடு நாடோறும் திருப்பணிகள் செய்பவர். தம்மை விரும்பிவந்து அடைபவர்களைத் திருநந்தனவனம் வைத்தல், பூக்கொய்தல், திருமாலைகட்டல், திருமஞ்சனம் எடுத்தல், திருவலகிடுதல், திருமெழுக்கிடுதல், திருவிளக்கேற்றல், திருமுறை எழுதல், திருமுறை வாசித்தல் முதலாகிய திருத்தொண்டுகளுள் அவரவருக்கு ஏற்ற திருத்தொண்டுகளிலே பயில்வித்து, அவர்களைச் சிவனடியார்களாக்குவார். இல்லறத்தில் இருந்து சிவனடியார்களை வழிபடுவார். சைவசமய குரவராகிய திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளைத் தினந்தோறும் முப்போதும் பேரன்போடு விதிப்படி பூசைசெய்து கொண்டு வந்தார். அந்தப் பூசாபலத்தினுலே திருக்கயிலாசமலையை அடைந்து சிவகணங்களுக்கு நாதராயினுர். தனக்கு, முன் ஓர் உதவி செய்யாதிருக்க ஒருவன் பிறனுக்குச் செய்த உதவிக்கு மண்ணுலகும் விண்ணுலகும் கைம்மாருகக் கொடுத்தாலும் ஒத்தல் அரிது என்றருளினர் வள்ளுவர்.

வேட்டு - விரும்பி. வையகம் - மண்ணுலகம்.

*குறள் அதி - 11, செய்ந்நன்றியறிதல் 1.*

## கூற்றுவநாயனுர்

*ஆற்றரிதாம் ஈசன் அடிமுடியா கப்புனைந்து*
*போற்றி மனக்கவலை போக்கினுர் - கூற்றர்*
*தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்*
*மனக்கவலை மாற்றல் அரிது.* (53)

களந்தை என்னும் பதியிலே, குறுநிலமன்னர் குலத்திலே கூற்றுவநாயனுர் அவதரித்தார். அவர் திருவைந்தெழுத்தை விதிப்படி கணிப்பவர். சிவனடியார்களைச் சிவனெனவே பாவித்து வழிபாடுசெய்பவர். திருவருட்பெருக்கால் அவர் பெருஞ்செல்வமுடையர் ஆயினுர். தேர் யானை குதிரை காலாட்கள் முதலிய நால்வகைச் சேனைகளும் நிறைந்தவராய், வீரச்செருக்கிலே மேம்பட்டு விளங்கினுர். பல அரசர்களுடன் போர்செய்து அவர்களை வென்ருர். அவர்களுடைய நாடுகளைத் தமதாகக்கொண்டார். அரசச்செல்வம் உடையவராயினும் முடி ஒன்று இல்லாக்குறையே அவருக்கு உள்ளது. உலகத்தை ஆளும்பொருட்டுத் தமக்கு முடிசூட்டும்படி தில்லைவாழந்தணர்களை அவர் வேண்டினுர். 'நாங்கள் சோழகுலத்து அரசருக்கே அன்றி மற்றவர்களுக்கு முடி சூட்டமாட்டோம்' என அவர்கள் கூறி மறுத்தார்கள். கூற்றுவநாயனுர் மனமறுக்கம் அடைந்தார், சபாநாயகரைப் பணிந்தார். 'எம்பெருமானே! அடியேனுக்குத் திருவடியையே முடியாகத் தந்தருளல் வேண்டும்' எனப் பிரார்த்தித்தார். அன்றிரவு நித்திரைசெய்தார். சபாநாயகர் அவர்கனவிலே எழுந்தருளிக் காட்சிதந்தார்; தம்முடைய திருவடிகளை முடியாகச் சூட்டியருளினுர். நாயனுர் அவைகளையே அரசமுடியாகச் சூடிப் பூமிமுழுவதையும் பொதுநீக்கி ஆண்டார். சிவதலங்களில் சென்று வணங்கித் திருப்பணிகள் செய்தார்.

ஒருவாற்ருனும் தனக்கு நிகரில்லாதவனது தாளைச் சேர்ந்தார்க்கல்லது, மனத்தின்கண் நிகழும் துன்பங்களை நீக்குதல் உண்டாகாது என அருளிச்செய்தார் வள்ளுவர்.

*குறள் அதி - 1, கடவுள்வாழ்த்து 7.*

## சுந்தரமூர்த்திநாயனர்

*ஆரூரர் ஈசனைத்தூ தாக்கியநாள் கூன்குருடு*
*தாரோடு தாம்பூலம் தாங்கவினை - தீர்வார்*
*நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து*
*மறைமொழி காட்டி விடும்.* (54)

அடியார்கட்கு எளியரான சிவபெருமான், திருவாரூரிலே பரவையார்பால் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்காக ஒருகாலல்ல இருகாலும் தூதாகச் சென்றார். அவர் உடன்பாட்டை அறிந்து தமது தோழர்பால் வந்து அறிவித்தார். அதனால் ஆளுடையநம்பிகள் குதுகலித்தார். பரவையார் வீட்டுக்கு மகிழ்ச்சியுடன்சென்றார். அப்பொழுது வழியிலே அங்கஈனர்களாகிய பலரும் தரிசனம் செய்து தம்முடைய குறைகள் நீங்கப்பெற்றார்கள். பூமாலை சந்தனம் தாம்பூலம் முதலிய தாங்கிச் சென்றவர்களுடைய பிறவி வாசனை முழுவதும் நீங்க அவர்கள் இன்பம் அடைந்தனர். நிறைந்த மொழியினையுடைய துறந்தாரது பெருமையை நிலவுலகத்தின் கண் அவராணையாகச் சொல்லிய மந்திரங்களே கண் கூடாகக்காட்டும் என்றருளினர் திருவள்ளுவநாயனர்.

தார் - மாலை. நிறைமொழியாவது அருளிக் கூறினும் வெகுண்டு கூறினும் அவ்வப்பயன்களைப் பயந்தேவிடும் மொழி. "சடையார் தூது தருந் திருநாட், கூனும் குருடும் தீர்த்தேவல் கொள்வார் குலவு மலர்ப்பாதம், யானும் பரவித் தீர்க்கின்றேன் ஏழு பிறப்பின் முடங்குகூன்" என்ற சேக்கிழார் சுவாமிகள் திருவாக்கும் சிந்தனைக்குரியதாம்.

*குறள் அதி - 3, நீத்தார்பெருமை 8.*

## பொய்யடிமையில்லாதபுலவர்

*மதுரையிலேழ் ஏழ்புலவர் வல்லசிவன் பாதம்*
*அதுபொருளா கக்கவிசெய் தாரே - புதுமையோ*
*கற்றதனுல் ஆய பயனென்கொல் வாலறிவன்*
*நற்ருள் தொழாஅர் எனின்.* (55)

பாண்டிநாடாகிய மங்கைக்கு முகம்போல விளங்குவது மதுரையம்பதி, அதனைத் துவாதசாந்தத் தலம் எனவும் கூறுவர். அத்திருத்தலத்திலே கடைச்சங்கப் புலவர் நாற்பத்தொன்பதின்மர் தலைமையிலே புலவர் பலர் செந்தண்டமிழ்நூல்களை ஆராய்ந்தனர். கபிலர் பரணர் நக்கிரர் முதலியோர் கடைச்சங்கப் புலவர்கள். சோமசுந்தரக்கடவுளிடத்திலே, சதுரமாய் இரண்டு சாண் அளவினதாகி மெய்ப்புலவர்களுக்கு எல்லாம் முழம் வளர்ந்து இருத்தற்கு இடங்கொடுக்கின்ற சங்கப்பலகையைப் பெற்று, அதில் இருந்துகொண்டு தமிழ்மொழியை அவர்கள் ஆராய்ந்தனர். உடலிலே திருநீறு கண்டிகை பூண்டவராய், பஞ்சாக்கரமந்திரம் செபிக்கும் நாவினையுடையராய், சிவனேபரம்பொருள் என உறுதிபூண்டவராய், அகத்தியம் தொல்காப்பியம் என்னும் இலக்கணநூலின்படி ஆசு மதுரம் சித்திரம் வித்தாரம் என்னும் நாற்கவிகளாலும் மெய்யன்புடன் பரமசிவனையே பாடி, பொய்யடிமையில்லாத புலவர்களாய்த் திகழ்ந்து சிவபதம் அடைந்தார்கள். எல்லா நூல்களையும் கற்றவர்க்கு அக்கல்வியறிவாலுய பயன் யாது? மெய்யுணர்வினையுடையானது நல்ல தாள்களைத் தொழாராயின் எனத் திருவள்ளுவர் அருளிச்செய்தமை காண்க.

*குறள் அதி - 1, கடவுள்வாழ்த்து 2.*

## புகழ்ச்சோழநாயனர்

*தங்களத்தில் விழ்ந்த சடைத்தலைகண் டஞ்சியஞ்சிப்*
*பொங்கழற்குள் விழ்ந்தார் புகழ்ச்சோழர் - எங்குமருத்*
*தியவை திய பயத்தலால் தியவை*
*தீயினும் அஞ்சப் படும்.* (56)

சோழநாட்டிலே, உறையூரிலே புகழ்ச்சோழ நாயனர் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் மற்றை அரசர்கள் பணிகேட்க, உலகம் தம்முடைய செங் கோலின்முறை நிற்க, சைவசமயம் தழைக்க அரசியற் றினர். சிவாலயங்கள் எல்லாவற்றினும் நித்திய நைமித் திகங்களை வழுவின்றி நடத்துவிப்பார். சிவனடியார் கள் வேண்டியவற்றைக் குறிப்பறிந்து கொடுப்பார்.

இவ்வாறு அரசியற்றிவரும்நாளிலே கொங்குநாட் டரசரும் குடகநாட்டரசரும் தரும் திறைப்பொருளை வாங்கக் கருதினர். தங்கள் குலத்தவர்களுக்கு உரிய கருவூர் என்னும் இராசதானியிலே தாம் அரசுரிமைச் சுற்றத்தாரோடு வந்தணைந்தார். அங்குள்ள ஆனிலை என்னும் திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள சிவ பெருமானை வணங்கித் தரிசித்தார். அரசமாளிகையில் புகுந்தார். அத்தாணிமண்டபத்தை யடைந்தார். சிங்கா தனத்தில் வீற்றிருந்தார். அரசர்களாகிய கொங்கரும் குடகரும் கொண்டுவந்த திறைப் பொருள்களைக் கண்டார்; அவர்களுக்கு அருள்புரிந்தார். இப்படி யிருக்கும்காலத்திலே சிவகாமியாண்டார் கொணர்ந்த பூக்களைச் சிதறிய தம்முடைய யானையையும் பாகரை யும் கொன்ற எறிபத்தநாயனரை அணைந்து 'என்னையும் கொன்றருளும்' என்று தமது வாளைக்கொடுத்தார். திருத்தொண்டிலே மிகச் சிறந்து விளங்கினர்.

அமைச்சர்கள் அரசரை அணுகி வணங்கி, திறைப் பொருள் கொணர்ந்து செலுத்தாத அரசன் ஒருவன் உளன் என்றார். அவன் யாவன்? என்றார் அரசர். அவனே அதிகன் என்பவன் என்றார் அமைச்சர். பின்னும் அவன் மலையரணத்தின் வாழ்பவன் என விண்ணப்பித்தனர். அதனைக்கேட்ட புகழ்ச்சோழ நாயனார் நீங்கள் பெரும்படையுடன் சென்று அந்த அரணத்தைத் துகள்துகளாகச் செய்து வாருங்கள் என்று ஆணையிட்டார். அமைச்சர்கள் சேனையுடன் சென்றனர். அம்மலையரணைப் பொடிபடுத்தினர். அதிகனுடைய சேனையை வதைத்தனர். அதிகன் பெரிதும் அஞ்சி ஓடி ஒளித்துக்கொண்டான். நாயனார் படைவீரர்களிற் பலர் அதிகன் படைவீரர்களின் தலைகளையும், நிதிக்குவைகளையும், யானை குதிரை முதலியவைகளையும்பற்றிக்கொண்டுவந்தனர். மந்திரிமாருடன் படைவீரர் கருவூரிலே வந்துசேர்ந்தனர். புகழ்ச்சோழர் அவைகளைக் கண்டார். தலைக்குவைகளுள் ஒரு தலையின் நடுவிலே ஒரு புன்சடையினைக் கண்ணுற்றார்; கண்ட அக்கணமே நடுநடுங்கினார்; மனம்கலங்கினார்; கைதொழுதார்; பெரும்பயத்துடனே எதிர்சென்றார்; அத்தலையிற் சடையைத் தெரியப்பார்த்தார். கண்ணீர் சொரிய அழுதார். "நான் சைவநெறியைப் பரிபாலிப்பது அழகு அழகு" என்றார். என் அரசாட்சி வெகு நன்று நன்று எனப்பிதற்றினார். சடைமுடியுடையார் பெருமானே அன்றோ! அவர் அருளிய மெய்நெறியைக் கண்டவர் இவரேயன்றோ!! இவ்வன்பரின் சடைத் தலையைத் தாங்கிவரக்கண்டும் அதிபாதகனாகிய அடியேன் பூமியைத் தாங்குதற்கு இருந்தேனோ? என்றார். 'உலகத்தைப் பாதுகாத்துப் பரமசிவனுக்கு வழித் தொண்டு செய்தற்காக என்னுடைய குமாரனுக்கு

முடி சூட்டுங்கள்' என ஆணையிட்டார். அக்கினியை வளர்ப்பித்தார். விபூதியை உடம்பெங்கும் உத்தூ ளனம் செய்தார். சடைச்சிரத்தை ஒரு பொற்கலத்தில் ஏந்தினர். அதனைத் தமது திருமுடியிலே தாங்கினர். திருவைந்தெழுத்தை ஓதினர். அவ்வக்கினியை வலஞ் செய்தார். அதனுட் புகுந்து சிவபெருமான் திருவடி நிழலையடைந்தார். தனக்கு இன்பம்பயத்தலைக் கருதிச் செய்யும் தீவினைகள் பின் அஃது ஒழித்துத் துன்பமே பயத்தலான், அத்தன்மையவாகிய தீவினைகள் ஒருவ ளுல் தீயினும் அஞ்சப்படும் என்ருர் திருவள்ளுவர்.

களம் - போர்க்களம்.

*குறள் அதி - 21, தீவினையச்சம் 2.*

## நரசிங்கமுனையரைய நாயனர்

*மூரிநர சிங்க முனையரையர் மாதவருள்*
*சீரியதூர்த் தர்க்கிரட்டி செய்தாராம் - பூரிநான்*
*அற்றம் மறைக்கும் பெருமை சிறுமைதான்*
*குற்றமே கூறி விடும்.* (57)

திருமுனைப்பாடி நாட்டிலே, குறுநிலமன்னர் குலத்திலே நரசிங்கமுனையரையர் அவதரித்தார். திரு நீறே இகப்பரு மிகப்பெருஞ்செல்வம் எனக்கொண்ட வர் அவர். சிவனடியார்களது திருவடிப்பத்தியே தமக்குப் பெரும்பேறு ஆம் எனத் துணிந்தவர். சமய அரசாகிய சைவசமயம் தழைத்தோங்கத் திருவருளை முன்னிட்டு அரசியற்றுபவர். சிவாலயங்களிலெல்லாம் நித்திய நைமித்திகபூசை செவ்வே நடைபெறச் செய் வார். திருவாதிரை நட்சத்திரந்தோறும் விசேடபூசை

களை நடத்துவிப்பார். அடியார்களுக்குத் திருவமுது செய்வித்து, அவர்களுக்குத்தனித்தனியே நூறு பொன் கொடுப்பார். அவ்வாறு அவர் தமது நியமத்தைச் செய்துவரும் காலத்திலே, ஒரு திருவாதிரை யன்று அடியார்களுக்கு வழக்கம்போலப் பொன்கொடுக்கும் பொழுது, தூர்த்தவேடம் உள்ள ஒருவர் விபூதி அணிந்துகொண்டு வந்தார். அவர் வடிவினைக்கண்டு பக்கத்திலுள்ளவர் இகழ்ந்து ஒதுங்கினர். அதனைக் கண்டார் நரசிங்கமுனையரையர்; எதிரே சென்றார்; அஞ்சலி செய்தார், அவரை அழைத்துக்கொண்டு போனார்; மிக உபசரித்தார்; சீலம் இல்லாதவராயினும் திருநீறு அணிந்தவர்களை உலகத்தார் இகழ்ந்து நரகத்தில் விழாதிருத்தற்பொருட்டு அவருக்கு இருநூறு பொன்கொடுத்தார்; வணங்கினார். இன்சொற்கூறி விடைகொடுத்தனுப்பினார். பல திருத்தொண்டுகளைச் செய்திருந்தார். பெருமையுடையார் பிறர்மானத்தையே கூறி அவமானத்தை மறையாகிற்பர்; மற்றைச் சிறுமையுடையார் பிறர் குணத்தை மறைத்துக் குற்றத்தையே கூறிவிடுவர் என்றார் திருவள்ளுவர்.

"பிறர் பிறர் சீரெல்லாம் தூற்றிச் சிறுமை புறங் காத்து யார் யார்க்கும் தாழ்ச்சி சொலல்" என்றார் ஸ்ரீ குமரகுருபரசுவாமிகளும்.

மூரி - வலிமை. தூர்த்தர் - காமுகர். இரட்டி - இரண்டுமடங்கு. பூரி - பொன். அற்றம் - அவமானம். தான்: அசை.

*குறள் அதி - 98, பெருமை - 10.*

## அதிபத்தநாயனுர்

மேனுட்செல் வம்கெடினும் மீன்வலைவி சிக்கோரொன்
மீனுளும் விட்டார் அதிபத்தர் - ஆனு(து)
இடனில் பருவத்தும் ஒப்புரவிற் கொல்கார்
கடனறி காட்சி யவர். (58)

சோழநாட்டிலே, நாகப்பட்டினத்திலே, சமுத்திர தீரத்தில் உள்ள நுளைப்பாடியிலே, பரதவர்குலத்திலே அதிபத்தநாயனுர் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் பரதவர்கட்குத் தலைவர். அவர் மரபினுக்கேற்ப வலைப் படுத்துக் குவிக்கும் மீன்குவைகளைப்பெற்று வாழ்ந்து வந்தார். சிவபத்தியில் மிகச் சிறந்தவர். அகப்படும் மீன்களில் ஒரு தலைமீனை 'இது சிவபெருமானுக்கு' எனக் கூறி மிக்க அன்புடன் எப்போதும் விட்டு வருவதை நியமமாகக்கொண்டு ஒழுகிவந்தார். ஒரு நாளிலே ஒருமீன் வருவதாயினும் அதனைச் சிவனுக் கென்றேவிடுவார். இப்படியாக நாட்கள் பலகழிந்தன. அடுத்தடுத்து அநேகநாட்களில் ஒருமீனே அகப்பட் டது. அதனைக் கடலிலேவிட்டுவரும் செயலையே அவர் மேற்கொண்டார். மீன் விற்றுவரும் வளம் சுருங் கியது. சுற்றத்தார் உணவின்றி வருந்தினர் எனினும், நாயனுர் வருந்திலர்; பட்டமீனைப்பரமசிவனுக்கென்றே விட்டு அகமிக மகிழ்ந்தனர். இப்படிப் பல நாட்கள் சென்றன. உணவின்றி உடல் தளர்ந்தது; ஆயினும், அவர் மனம் தளர்ந்திலர். அவர் அன்பினை இறைவர் அறிந்தார்.

இப்படி நிகழும் நாளிலே, வேறு ஒருநாள் விலை மதிப்பு இல்லாத பேரொளிப்பிழம்பினையுடைய, நவ

மணிகளால் உறுப்புக்கள் அமைந்த, அற்புதமான ஒரு பொன்மீனைப் பரதவர் வலைப்படுத்தனர். அதனை எடுத்து ஒருமீன்படுத்தோம் எனத் தலைவருக்கு விண்ணப்பித்தனர் பரதவர். அதிபத்தநாயனாரும் அந்த மீனைக் கண்டார். இப்பொன்மீன் என்னை ஆட்கொண்டருளிய பரமசிவனுக்காம் என்று கடலிலேவிட்டார். அப்பொழுது சிவபெருமான் இடபவாகனக் காட்சி தந்தருளினர். அதிபத்தர் ஆனந்த அருவிசொரிய, மனங் கசிந்துருகி வணங்கினர். அவரைச் சிவபெருமான் அடியார்களோடு தமது உலகத்திலே இருக்கும்படி அருளினர். செல்வம் சுருங்கிய காலத்தும் ஒப்புரவு செய்தற்குத் தளரார் தாம் செய்யத் தகுவனவற்றை அறிந்த இயற்கையறிவுடையார் என்றருளினர் குறளாசிரியர்.

வலைவீசிக்கு - சிவபெருமானுக்கு. இறைவன் வலைவீசின வரலாற்றைத் திருவிளையாடலில் காண்க. இடனில் பருவம் - செல்வம் சுருங்கிய காலம். ஒப்புரவு - உபகாரம்.

*குறள் அதி - 22, ஒப்புரவறிதல் 8.*

## கலிக்கம்பநாயனர்

*மெய்யடியார் தாளில்லாள் வெள்கக் கழுவிவாள்*
*கையடியங் கீர்ந்தார் கலிக்கம்பர் - பொய்யடிக்கொண்(டு)*
*இல்லானை அஞ்சுவான் அஞ்சுமற் றெஞ்ஞான்றும்*
*நல்லார்க்கு நல்ல செயல்.* (59)

நடுநாட்டிலே திருப்பெண்ணுகடத்திலே வணிகர் குலத்திலே அவதரித்தவர் கலிக்கம்பநாயனர். அவர்

அத்தலத்திலே உள்ள திருத்தூங்கானைமாடம் என்னும் கோயிலிலே சென்று சிவபெருமானுக்குத் திருத் தொண்டு செய்துவருபவர். சிவபெருமானுக்குத் திருத் தொண்டு செய்யினும், சிவனடியாரை வழிபடா விடின் பயனில்லை என உறுதிபூண்டவர். ஆகலின், அடியார்களுக்குத் திருவமுது செய்வித்து அவர்கள் வேண்டும்பொருளைப் பெருவிருப்பத்துடன் கொடுத்து வந்தார். ஒருநாள் அடியார்களை அமுதுசெய்விப்பதன் முன் வழக்கம்போல மனைவியார் கரகநீர்வார்க்க, நாய னூர் அவ்வடியார்களின் திருவடிகளை விளக்கினூர்.

அவருள் ஒருவர் முன்பு தம் வீட்டில் பணிவிடைக் காரராய் இருந்து போனவர். அவரும் சிவவேடம் தாங்கி வந்திருக்கக்கண்ட மனைவியார் கரகநீர் வார்க்கத் தாழ்த்தார். உடனே நாயனூர் தம் மனைவியார் அறியா மைக்கு வருந்திச் சினங்கொண்டார்; வாளை எடுத்துக் கரத்தைத் துணித்தார். தாமே கரகநீரைவார்த்து அவர் திருவடிகளை விளக்கினூர். தாமே அடியார்கட்குத் திருவமுது செய்வித்தார். தன்மனையாளை அஞ்சுவான், தான் தேடியபொருளே ஆயினும் அதனுல் நல்லார்க்கு நல்லன செய்தலை எஞ்ஞான்றும் அஞ்சாநிற்கும் என்றூர் வள்ளுவனூர்.

*குறள் அதி - 91, பெண்வழிச்சேறல் 5.*

## கலியநாயனூர்

*எள்ளா விளக்கரன்பால் ஏற்றவே வாள்கலியர்*
*கொள்ளாரேல் ஏதும் கொடாருலகில் - உள்ளார்கொல்*
*நல்லார்கட் பட்ட வறுமையின் இன்னுதே*
*கல்லார்கட் பட்ட திரு.* (60)

தொண்டைமண்டலத்திலே, திருவொற்றியூரிலே உள்ளசக்கரப்பாடியிலே அவதரித்தவர் கலியநாயனுர். அவர் செக்கார்குலத்தவர்; பெருஞ்செல்வர்; செல்வம், யாக்கைமுதலியவற்றின் நிலையாமையை உணர்ந்தவர். சிவபுண்ணியம் செய்தலே மேல் எனத்தெளிந்தவர். அவ்வூர்ச் சிவாலயத்திலே உள்ளும் புறம்பும் அல்லும் பகலும் எண்ணிறந்த திருவிளக்குகள் ஏற்றும் நியமம் பூண்டவர் அவர். அவருடைய அளவிறந்த பத்தியைப் பிறருக்குப் புலப்படுத்தத் திருவுளங்கொண்டருளினர் சிவபெருமான். அவரது செல்வமெல்லாம் குன்றச் செய்தார். வறுமை மிக்கது. நாயனுர் அக்காலத்தும் பணி குறையாமல் தம் மரபில் உள்ளோர் தரும் எண்ணெயை வாங்கிவந்து விற்று, அதனுல் கிடைக்கும் கூலியைக்கொண்டு விளக்கு ஏற்றிவந்தார். சில நாட்களில் அவரும் கொடாதொழிந்தனர். மனம் தளர்ந்தார். பின்பு எண்ணெய் ஆட்டும் இடத்திற் சென்று தொழில்செய்து கூலிபெற்றுத் திருவிளக்கிட்டார். அத்தொழிலால் வரும் பேறும் கிடையாது முட்டுப்பாடு வந்தது; கவலைமிகக்கொண்டார்; மனைவியாரை விற்றுத் திருவிளக்குப்பணி செய்ய முற்பட்டார். விலைக்குவாங்குவாரின்றித் தவித்தார். ஆலயம் அடைந்தார், திருவிளக்கு ஏற்றும்சமயத்திலே 'இப்பணி மாறில் யான் இறப்பேன்' எனத்துணிந்தார்; திரியிட்ட அகல்களைப் பரப்பினுர். எண்ணெய்க்குப் பதிலாகத் தமது இரத்தத்தை நிறைக்கும் பொருட்டு ஆயுதத்திலுலே கழுத்தை அரிந்தார். அப்போது சிவபெருமான் நேரில் எழுந்தருளினுர். அவருடைய கரத்தைப் பிடித்தார். இடபவாகனக் காட்சி தந்தார். நாயனுரும்

தாம் அடைந்த துன்பம்நீங்கி இன்புற்று வணங்கினார். கற்றார்மாட்டு நின்ற வறுமையினும் இன்னாது. கல்லாதார்மாட்டு நின்ற செல்வம் என்று திருவள்ளுவ நாயனார் கூறியருளினமை காண்க.

திரு கல்லாரைக்கெடுக்க, வறுமை நல்லாரைக் கொடாது என்பது அறியத்தக்கது. இன்னாதே - துன்பம் செய்வதேயாகும். பட்ட - உண்டாகிய.

*குறள் அதி - 41, கல்லாமை - 8.*

## சத்திநாயனார்

*அண்ணலடி யாரைஇகழ்ந் தார்நரகில் ஆழாதே*
*தன்னளியால் நாத்தறித்தார் சத்தியார் - எண்ணமுற*
*யாகாவா ராயினும் நாகாக்க காவாக்கால்*
*சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு.* (61)

சத்திநாயனார், சோழநாட்டிலே வரிஞ்சியூரிலே வேளாளர் குலத்திலே அவதரித்தவர். சிவபெருமானிடத்துப் பேரன்புகொண்டு திருத்தொண்டு செய்பவர். சிவனடி மறவாச் சிந்தையினர். சிவனடியார்களை இகழ்ந்துபேசும் அதிபாதகர் நாக்கை அரிதலாகிய அருமைத் திருத்தொண்டைப் பெருமையுறச் செய்து வந்தார். இவர் நெடுங்காலம் இப்பணியைச் செய்து கொண்டிருந்து சிவபெருமான் திருவடிநிழலை அடைந்தார். ஒருவர் தம்மால் காக்கப்படுவன எல்லாவற்றையும் காக்கமாட்டாராயினும் நா ஒன்றனையும் காக்க; அதனைக் காவாராயின் சொற்குற்றத்தின்கண்பட்டுத் தாமே துன்புறுவர் எனத் திருவள்ளுவநாயனார் அருளிச்செய்தமை காண்க.

தண்ணளி - அருள். தறித்தார் - அறுத்தார். யா - எல்லாவற்றையும். சோகாப்பர் - துன்பம் அடைவர்.

*குறள் அதி - 13, அடக்கமுடைமை 7.*

## ஐயடிகள்காடவர்கோன்நாயனுர்

*நாடலரும் நற்பதிகள் நண்ணிநல் வெண்பாவாய்ந்(து)*
*ஆடலர னுக்களித்தார் ஐயடிகள் - காடவர்கோன்*
*தாமின் புறுவ துலகின் புறக்கண்டு*
*காமுறுவர் கற்றறிந் தார்.* (62)

ஐயடிகள் காடவர்கோன்நாயனுர் தொண்டை மண்டலத்திலே, காஞ்சீபுரத்திலே, பல்லவர்குலத்திலே அவதரித்தவர். சைவத்திருநெறி வாழும்படி அரசியற்றியவர். எல்லா உயிர்களும் இம்மை இன்பத்தையும், மறுமையின்பத்தையும் பெற்று வாழ்ந்து முத்தியின்பத்தை அடைதல்வேண்டும் என்னும் எண்ணம் நிறைந்தவர். பிறநாடுகளையும் தம் அரசின்கீழ் வைத்து உயிர்கள் இன்புறச்செய்தார். சிலகாலம் செல்ல அரசாட்சியும் துன்பமயம் எனக் கருதினுர். வெறுத்தார். புத்திரனுக்கு அரசுச்சுமையை ஏற்றினுர். சிதம்பரம் முதலிய சிவதலங்கள்தோறும்சென்று சுவாமிதரிசனம் செய்தார். திருப்பணிகளை இயற்றினுர். தலங்களுக்கு ஒவ்வொரு திருவெண்பாப்பாடினுர். இவ்வாறு நெடுங்காலம் வாழ்ந்திருந்து சிவபதத்தை அடைந்தார். தாம் இன்புறுதற்கு ஏதுவாகிய கல்விக்கு உலகம் இன்புறுதலால் அச்சிறப்பு நோக்கி, கற்றறிந்தார் பின்னும் அதனையே விரும்புவர் என்றுர் திருவள்ளுவநாயனுர்.

*குறள் அதி - 40, கல்வி 9.*

## சுந்தரமூர்த்திநாயனுர்

*நீரூர் முதலையது முன்னுண்ட பிள்ளையைப்பின்
ஆரூரர் பாவால் அழைப்பித்தார் - பாரூர்
பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்.* (63)

சுந்தரமூர்த்திசுவாமிகள் சேரமான்பெருமாள்நாயனுரை நினைந்து திருவாரூரினின்று அவரிடத்திற் போம்படி கருதினுர். சோழநாட்டைக் கடந்து கொங்கதேசத்தை அடைந்தார். திருப்புக்கொளியூரிற் சென்ருர். அங்கே ஒரு தெருவிலே இரண்டுவீடுகளில் ஒன்றிலே மங்கல ஒலியும், ஒன்றிலே அழுகையொலியும் எழுதலைக்கேட்டார். என்ன என்று வினவினுர். அங்குள்ளார் "ஐந்துபிராயமுடைய இரண்டு பிள்ளைகள் குளத்திலே குளித்தார்கள்; அப்போது ஒரு பிள்ளையை முதலை விழுங்கியது; மற்றைப்பிள்ளை தப்பினுன்; பிழைத்த பிள்ளைக்கு இந்த வீட்டில் உபநயனச்சடங்கு நடைபெறுகின்ற ஒலிஇது; இறந்தபிள்ளையை நினைந்து அந்தவீட்டார் அழும் ஒலி அது" என்று சொன்னுர்கள். இறந்த பிள்ளையின் தாய்தந்தையர் இருவரும் சுந்தரரை வந்துவணங்கினர். "தேவரீரைக்காண வேணவாவுற்று இருந்தோம்; அப்பேறு இன்று கிடைத்தது" என முகமலர்ந்து உபசாரம் கூறினர். அப்பெற்ருேர் வருத்தம் நீங்கும்படி அப்புதல்வனை முதலைவிழுங்கிய வாவியின்கரையை அடைந்தார் சுந்தரர். "உரைப்பார் உரையுகந்துள்கவல்லார்தங்கள் உச்சியாய், அரைக்காடரவா ஆதியும் அந்தமும் ஆயினுய், புரைக்காடு சோலைப் புக்கொளியூர் அவிநாசியே, கரைக்கால் முதலையைப் பிள்ளைதரச்சொல்லு காலனையே" என்ற நாலாம்

திருப்பாட்டுப் பாடிமுடிதற்குமுன் சென்ற ஆண்டு களின் வளர்ச்சியுடன் பிள்ளையை முதலை கரையில் கொண்டுவந்து உமிழ்ந்தது. யாவரும் மகிழ்ந்தனர். அவிநாசியப்பரை வணங்கினர். எல்லா மக்களுயிர்க் கும் பொதுவாகிய பிறப்பு இயல்பு ஒக்குமே எனினும், பெருமை சிறுமை எனப்பட்ட சிறப்பு இயல்புகள் ஒவ்வா; அவை செய்யும் தொழில்களது வேறுபாட் டான் என்றூர் வள்ளுவனுர்.

நீர் ஊர் - நீரில் வசிக்கின்ற. அது; பகுதிப்பொருள் விகுதி. பார் - பூமி.

குறள் அதி - 98, பெருமை 2.

## கணம்புல்லநாயனுர்

*கணம்புல்லர் நெய்வாங்கக் காணுர் கணம்புல்*
*இணங்குதலைநெய்விளக்கொன் றிட்டார்-வணங்கரன்பால்*
*துன்பம் உறவரினும் செய்க துணிவாற்றி*
*இன்பம் பயக்கும் வினை.* (64)

இருக்குவேளூர் என்பது வடவெள்ளாற்றுக்குத் தென்கரையிலே உள்ளது. அவ்வூரிலே சிவபத்தர் ஒருவர் இருந்தார். அவர் பெருஞ் செல்வர். செல்வம் பெற்றதனுற் பயன் சிவாலயத்திலே திருவிளக்கேற் றுதல் எனச் சிந்தையில் உறுதிபூண்டார். திருவிளக்குப் பணியை விடாமல் செய்துவந்தார். நெடுங்காலம் அந்தப்பணி சிறப்பாக நடைபெற்றது. வறுமையும் வந்துற்றது. சிதம்பரத்தை அடைந்தார். சபாநாய கரைத் தரிசனம் செய்தார். திருப்புலீச்சரம் என்னும் ஆலயத்தில் தீபப்பணிவிடை செய்துவந்தார். தம் முடைய வீட்டில் உள்ள பொருள்களை எல்லாம்

விற்றுப் பணிவிடையை மாருமல் செய்தார். பொருள் களும் ஒழிந்தன. கணம்புல்லுகளை அரிந்துகொண்டு வந்து விற்று நெய்வாங்கித் திருவிளக்கெரித்தார். அத ஞல் கணம்புல்லநாயனுர் என்ற பெயர் உண்டாயிற்று. ஒருநாள் அந்தப் புல்லும் விலைப்படாதாயிற்று. அப் புல்லையே விளக்காக எரித்தார். முடிவுவரையில் எரித் தற்கு அப்புல்லும் போதாததாயிற்று. அடுத்த விளக் கிலே தமது முடியை மடுத்து எரித்தார். பரமசிவன் கருணையால் சிவலோகத்தை அடைந்தார். முதற்கண் மெய்ம்முயற்சியால் தமக்குத் துன்பம் மிகவருமா யினும் அது நோக்கித் தளராது முடிவின்கண் இன்பம் பயக்கும் வினையைத் திட்பமுடையராய்ச் செய்க என்றருளினர் திருவள்ளுவர்.

உற வரினும் - மிகுதியாகவந்தாலும், துணிவு - வலிமை.

*குறள் அதி - 67, வினைத்திட்பம் 9.*

## காரிநாயனுர்

*பாரில்மூ வேந்தர் பரிசிலுத வப்பாடிக்*
*காரியார் ஆலயங்கள் கட்டினுர் - ஓரிடமோ*
*யாதானும் நாடாமால் ஊராமால் என்னெருவன்*
*சாந்துணையும் கல்லாத வாறு.* (65)

காரிநாயனுர் அவதரித்த தலம் திருக்கடவூர் ஆம். அவர் தமிழ்மொழியிலே மிகவல்லவர். அவர் சொல் விளங்கிப் பொருள் மறைந்துகிடக்கும்படி தமது பெயரினுலே தமிழ்க்கோவை பாடினுர். தமிழ்நாட்டு மூவேந்தரிடமும் சென்றுர். அவர்கள் மகிழும்படி அதற்குப் பொருள்விளங்க விரித்துரைத்தார். அவர்கள்

மகிழ்ந்து தந்த திரவியங்களைப் பெற்று, சிவாலயங்கள் பலவற்றைக் கட்டினார், அடியார்களுக்கு வேண்டும் பொருள்களைக் கொடுத்தார். திருக்கயிலாய மலையை மறவாத கருத்துடையவரானார். தம்முடைய சிவ கீர்த்தியை உலகமெங்கும் நிலைநிறுத்தினார். சிவபெருமானது திருவருளைப்பெற்றார். மனம்போல உடம்பும் திருக்கயிலாய மலையை அடையப்பெற்றார். கற்றவனுக்குத் தன் நாடும் தன் ஊருமே அன்றி யாதானும் ஒருநாடும் நாடாம், யாதானும் ஓர் ஊரும் ஊராம்; இங்ஙனமாயின் ஒருவன் தான் இறக்கின்ற அளவும் கல்லாது கழிக்கின்றது என்கருதி? ஆகலின், கல்வி போலச் சிறந்தது பிறிதில்லை, அதனையே எப்பொழுதும் செய்க எனத் திருவள்ளுவநாயனார் சிறப்பாகச் சொல்லியருளினமை காண்க.

சாம் துணையும் - இறக்குமளவும். என் - என் கருதி. "கற்றோர்க்குச் சென்றவிடமெல்லாம் சிறப்பு" என்பது ஔவையார்வாக்கு.

*குறள் அதி - 40, கல்வி 7.*

## நெடுமாறநாயனார்

*பழுதறுசம் பந்தரெதிர் பாழமணர் தாழ*
*வழுவறநெல் வேலிவென்ற மாறன் - கழுவிட்டான்*
*அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய்*
*நின்றது மன்னவன் கோல்.* (66)

பாண்டிநாட்டிலே, மதுராபுரியிலே கூன்பாண்டியர் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் சமணர்களுடைய துர்ப்போதனையினாலே பொய்மார்க்கமாகிய ஆருகதமதத்திலே சேர்ந்தார். சோழமன்னருடைய

திருமகளாரும் சைவசிகாமணியும் ஆகிய மங்கையர்க் கரசியாரை மனைவியாராகவும், குலச்சிறைநாயனுரை மந்திரியாராகவும் அவ்வரசர் முன்னைப் பிறவிகளில் ஈட்டிய புண்ணியத்தால் பெற்றிருந்தார். அதனுல், சைவசமயகுரவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருக்கரத்தினுல் தீண்டித் திருநீறு சாத்தப்பட்டார். அந்தநாயனுர் அருளிச்செய்த உண்மை உபதேசத் தைப்பெற்ருர். உயிர்க்கூனும் உடற்கூனும் அவருக்கு நிமிர்ந்தன. நெடுமாறநாயனுர் என்னும் பெயரைப் பெற்ருர். தம்மோடு போர்செய்ய வந்த வடபுலத்து அரசரோடு திருநெல்வேலிப் போர்க்களத்திலே போர் செய்து வென்ருர். சைவசமயம் தழைத்தோங்கும்படி நெடுங்காலம் அரசுசெய்திருந்து சிவபதம் அடைந்தார். அந்தணர்க்குரித்தாய வேதத்திற்கும் அதனுல் சொல்லப் பட்ட அறத்திற்கும் காரணமாய் நிலைபெற்றது, அரச னுல் செலுத்தப்படுகின்ற செங்கோல் எனத் திருக் குறள் ஆசிரியர் சொல்லியமை காண்க.

*குறள் அதி - 55, செங்கோன்மை 3.*

## வாயிலார் நாயனுர்

*ஆயறிவு தீபம் அகமலரன் பேயமுதம்*
*கோயிலிறைக் கோர்மனமாய்க் கொண்டுவந்தார் - வாயி*
*ஓர்த்துள்ளம் உள்ள துணரின் ஒருதலையாப் [லார்*
*பேர்த்துள்ள வேண்டா பிறப்பு. (67)*

வாயிலார்நாயனுர் தொண்டைநாட்டிலே மயிலாப் பூரிலே அவதரித்தவர். வேளாளகுலத்தினர். சிவபெரு மானை ஒருபொழுதும் மறவாது மனக்கோயிலுள்ளே இருத்தினர்; சிவஞானமாகிய திருவிளக்கேற்றினுர்;

ஆனந்தமாகிய திருமஞ்சனம் ஆட்டினர்; அன்பாகிய திருவமுதத்தை நிவேதித்தார். இப்படிப்பட்ட ஞான பூசையை நெடுங்காலம் செய்திருந்து சிவபதம் அடைந்தார். வீட்டிற்கு நிமித்தகாரணமாகிய முதற் பொருளை உணர்தற்கு உபாயம் மூன்று; அவை கேள்வி விமரிசம் பாவனை என்பன. இதனைச் சிரவணம், மனனம், நிதித்தியாசனம் என்று கூறுவர். அங்ஙனம் கேட்ட உபதேச மொழிப்பொருளை ஒருவன் உள்ளம் அளவைகளானும் பொருந்துமாற்றனும் தெளிய ஆராய்ந்து, அதனல் முதற்பொருளை உணருமாயின், அவனுக்கு மாறிப் பிறப்புளதாக நினைக்கவேண்டா என்றருளினர் திருவள்ளுவநாயனர்.

ஆய் - ஆராய்கின்ற. இறைக்கு ஓர் மனம் ஆய் எனக் கூட்டிப் பொருள்கொள்க. ஓர்த்து-ஆராய்ந்து. உள்ளது - முதற்பொருளை. பேர்த்து - மாறி. உள்ள - நினைக்க.

*குறள் அதி - 36, மெய்யுணர்தல் 7.*

## முனையடுவார் நாயனர்

*வினையடுவார் வந்தடுக்க வென்றுகொண்ட கூலி*
*தனையடுவார் சைவர் தமக்கே - முனையடுவார்*
*தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு*
*வேளாண்மை செய்தற் பொருட்டு.* (68)

சோழநாட்டிலே திருநீடூரிலே வேளாளர் குலத்திலே ஒரு பெரியவர் இருந்தார். அவர் சிவனடியார்களிடத்திலே மிக்க பக்தியுடையவர். பகைவருடைய போர்முனையிலே தோற்றவர்கள் தம்பால்வந்து கூலி பேசினல் அவர்களுக்காகச் சென்று போர்செய்து

வெல்லுவார். அதனால் பொருள் ஈட்டுவார். சிவனடியார்களுக்கெல்லாம் நிரம்பப் பொருள் கொடுப்பார். அவர்களைத் திருவமுது செய்விப்பார். அந்தக் காரணத்தால் அவருக்கு முனையடுவார்நாயனார் என்னும் திருநாமம் உண்டாயிற்று. இத்தகைய அரிய திருத்தொண்டை நெடுங்காலம் செய்துகொண்டிருந்து சிவபதம் பெற்றார். தகுதியுடையார்க்காயின் முயல்தலைச் செய்து ஈட்டிய பொருள்முழுதும் ஒப்புரவு செய்தற் பயத்தவாம் எனத் திருவள்ளுவர் கூறியமை காண்க.

பிறர்க்கு உதவாதார் போலத் தாமே உண்டற் பொருட்டும், வைத்து இழத்தற்பொருட்டும் அன்று என்பது கருத்து.

வினை அடுவார் - நல்வினை தீவினைகளை அழிப்பார். தாள் ஆற்றி - முயற்சிசெய்து. வேளாண்மை - உபகாரம்.

*குறள் அதி - 22, ஒப்புரவறிதல் 2:*

## சுந்தரமூர்த்திநாயனார்

*தென்புகலூர் ஈசனையும் சென்றுபணிந் தாரூரர்*
*பொன்புகலாப் பெற்றார் புகழ்பெற்றார் - இன்புற்றார்*
*ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க் கெண்பொருள்*
*ஏனை இரண்டும் ஒருங்கு.* (69)

தம்பிரான்தோழராகிய சுந்தரமூர்த்திசுவாமிகள் திருப்புகலூருக்குச்சென்று சுவாமிதரிசனம் செய்தார். திருவிழாச்செலவிற்குப் பரவையாருக்குப் பசும்பொன் வேண்டுமென வேண்டினார். அன்று திருக்கோயிலின் முகப்பிலே அவர் சிரமம் தீரும்படி, செங்கற்களையே

தலையணையாக எடுத்து வைத்துக்கொண்டு நித்திரை செய்தார். செங்கற்களெல்லாம் செம்பொன்னுலாகிய கற்களாக இருக்கக்கண்டார். பெருமகிழ்ச்சி அடைந்தார். அதனை எடுத்துவந்து பரவையாருக்குக்கொடுத்து அடியார்களுக்கு திருவமுதுசெய்விக்கும்படி கட்டளையிட்டார். நெறியான்வரும் பொருளை இறப்ப மிகப் படைத்தார்க்கு, மற்றை அறனும் இன்பமும் ஒருங்கே எளிய பொருள்களாம் என்று திருவள்ளுவநாயனார் கட்டளையிட்டருளியமை காண்க.

*'' வடுவிலா வையத்து மன்னிய மூன்றின்*
*நடுவண தெய்த இருதலையு மெய்தும் ''*

என்பது நாலடி நானூறு.

ஒண்பொருள் - நெறியால் வரும்பொருள். காழ்ப்ப - மிக. எண் - எளிய. ஏனை இரண்டாவன அறனும் இன்பமும்.

*குறள் அதி - 76, பொருள்செயல்வகை 10.*

## கழற்சிங்கநாயனார்

*தொழச்சங் கரன்சூடாத் தூய்மலர்மோந் தாள்கை*
*விழச்சென் றரிந்து விடுத்தார் - கழற்சிங்கர்*
*ஓர்ந்துகன் ணோடா திறைபுரிந்தி யார்மாட்டும்*
*தேர்ந்துசெய் வ.:தே முறை.* (70)

கழற்சிங்கநாயனார் காடவர் குலத்தில் அவதரித்தவர். சிவபெருமான் திருவடிகளையே அன்றி மற்றொன்றும் அறியாத வாய்மையாளர். சிவபெருமானது திருவருளால் வடபுலத்தரசர்களைப் போரில்வென்றார். எங்கும் சைவசமயம் தழைத்தோங்குமாறு அரசு

புரிந்தார். அவர் மாதேவியோடு சிவதரிசனம் செய்யுமாறு தலங்கள்தோறும் சென்று வணங்கிக்கொண்டு திருவாரூரை அடைந்தார். பூங்கோயிலின் உள்ளே சென்று வன்மீகநாதரை வணங்கினர். அவருடைய மாதேவி திருக்கோயிலை வலம் வந்தாள், அங்குள்ள சிறப்புக்களையெல்லாம் கண்டாள். திருமாலைகட்டும் மண்டபத்தின் பக்கத்திலே விழுந்து கிடந்த ஒரு புதுப்பூவை எடுத்துமோந்தாள். அதனைச் செருத்துணை நாயனர் கண்டார்; விரைந்து ஓடிவந்தார். பூமண்டபத்திலிருந்து பூவை எடுத்து மோந்ததாகக் கருதி அவளைக் கூந்தலைப் பிடித்திழுத்து வீழ்த்தினர். அவளுடைய மூக்கைக் கத்தியினலே அரிந்தார். சுவாமி தரிசனம் செய்துகொண்டேவந்த கழற்சிங்கநாயனரும் அதனைக்கண்டார். நடந்ததைவிசாரித்தறிந்தார்; பூவை எடுத்த பூவை கையையன்றே முதலில் துணிக்க வேண்டும் என்ருர். உடைவாளை உருவிக் கையைத் துணித்தார். தன்கீழ் வாழ்வார் குற்றம்செய்தால் அக்குற்றத்தை நாடி, யாவர்மாட்டும் கண்ணேடாது நடுவுநிலைமையைப் பொருந்தி, அக்குற்றத்துக்குச் சொல்லிய தண்டத்தை நூலோரோடும் ஆராய்ந்து அவ்வளவிற்ருகச் செய்வதே முறையாம் எனக்கூறிய திருவள்ளுவர் வாய்மொழி காண்க.

*குறள் அதி - 55, செங்கோன்மை 1.*

## இடங்கழிநாயனர்

*நடங்கழியார் அன்பர்க்கே நற்பொருள்கள் எல்லாம்*
*இடங்கழியார் அன்பினெடுத் தீந்தார் - முடங்கா*
*அருளென்னும் அன்பீன் குழவி பொருளென்னும்*
*செல்வச் செவிலியால் உண்டு.* (71)

கோனாட்டிலே கொடும்பாளூரிலே குறுநிலமன்னர் குலத்திலே அவதரித்தவர் இடங்கழிநாயனார் என்பவர். கனகசபையின் முகட்டைக் கொங்கிற் செம்பொன்னால் வேய்ந்த ஆதித்தன் குடியிலே அவர் தோன்றினார். அவர் சைவநெறியும் வைதிகநெறியும் தழைத்தோங்க, சிவாலயங்களெங்கும் நித்திய நைமித்திகங்கள் சிவாகம விதிப்படி நடக்க அரசியற்றினார். ஒருநாள், சிவனடியார்களைத் திருவமுது செய்விக்கும் அடியார் ஒருவர் பொருள் முட்டுப்பாட்டால் அரசன் பண்டாரத்திலே நெற்கூட்டு நிரைகள் நிறைந்த கொட்டகாரத்தில் நள்ளிரவில் புகுந்து நெல்லை முகந்து எடுத்தார். காவலாளர்கள் கண்ணுற்றனர்; அவரைப் பிடித்துத் தம் அரசர் முன்பு கொண்டு நிறுத்தினர். இடங்கழிநாயனார் அவரை நோக்கி 'நெற்பண்டாரத்தை ஏன் கவர்ந்தீர்' என்றார். 'நான் சிவனடியார்களைத் திருவமுது செய்வித்தற்குப் பொருள் இன்மையால் இங்ஙனம் செய்தேன் என்றார்' அந்த அடியவர். அரசர் கேட்டு மிகஇரங்கினார். "சிவனடியார்களெல்லாரும் நெற்பண்டாரத்தை மாத்திரமின்றி மற்றைய நிதிப் பண்டாரங்களையும் எடுத்துக்கொள்க" என்று எங்கும் பறையறைவித்தார். எமக்கு இவரன்றோ பண்டாரம் என்று மகிழ்ந்தார். பின்னும் திருநீற்றின்நெறி தழைக்க நெடுங்காலம் அரசு புரிந்து வீடுபேற்றை அடைந்தார். அன்பினால் ஈனப்பட்ட அருள் என்னும் குழவி, பொருள் என்று உயர்த்துச் சொல்லப்படும் செல்வத்தையுடைய செவிலியான் வளரும் என வள்ளுவர் கூறியருளினர்.

நடம் கழியார் - நடனம் செய்தலில் நீங்காத நடராசப்பெருமானைக் குறித்தபடி.

குறள் அதி - 76, பொருள்செயல்வகை 7.

## செருத்துணை நாயனர்

*கருத்தனரி பூவைக் கழற்சிங்கன் தேவி*
*அருத்தியின்மோந்தாள்மூக் கரிந்தார் - செருத்துணையார்*
*வாளொடென் வன்கண்ணர் அல்லார்க்கு நூலொடென்*
*நுண்ணவை அஞ்சு பவர்க்கு.* (72)

சோழமண்டலத்திலே, மருகல்நாட்டிலே, தஞ்சாவூரிலே செருத்துணைநாயனுர் என்பவர் தோன்றியருளினர். அவர் வேளாளர் குலத்தினர். சைவசிகாமணி. திருவாரூரை அடைந்து காலந்தோறும் வன்மீகநாதரை வணங்கித் திருத்தொண்டு செய்துகொண்டிருந்தார். இப்படியிருக்கின்ற காலத்திலே சுவாமி தரிசனம் செய்தற்கு வந்த கழற்சிங்கநாயனுருடைய மாதேவி பூமாலைகட்டும் மண்டபத்தின் பக்கத்திலே விழுந்துகிடந்த ஒரு பூவை எடுத்து மோந்தாள் என நினைந்து, கத்தியினுலே அவளுடைய மூக்கை அரிந்தார். பின்னும் நெடுங்காலம் அவர் திருத்தொண்டின் வழிநின்று சிவபதமடைந்தார். வன்கண்மையுடையர் அல்லாதார்க்கு வாளோடு என்ன இயைபு உண்டு? அதுபோல, நுண்ணியாரது அவையை அஞ்சுவார்க்கு நூலோடு என்ன இயைபு உண்டு? என்று அருளிச்செய்தார் திருவள்ளுவநாயனுர்.

*குறள் அதி - 73, அவையஞ்சாமை 6.*

## புகழ்த்துணை நாயனர்

*வற்கடம்வந் தூண்போய்மெய் வாடியபு கழ்த்துணைகை*
*நற்கலசம் விழவர னுர்கொடுத்தார் - பொற்காசு*
*தெய்வத்தான் ஆகா தெனினும் முயற்சிதன்*
*மெய்வருத்தக் கூலி தரும்.* (73)

செருவிலிபுத்தூரிலே புகழ்த்துணைநாயனர் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் ஆதிசைவ குலத்தினர். சிவாகமவிதிப்படி பரமசிவனை அருச்சனைசெய்துவரும் காலத்திலே பஞ்சம் உண்டாயிற்று. பசிமிகப்பெற்ருர். அருச்சனையை விடுவேனல்லேன் என மன உறுதி பூண்டார். அல்லும் பகலும் அருச்சித்தார். ஒருநாள் அவர் திருமஞ்சனம் ஆட்டும்பொழுது மிகுந்த பசி நோயால் கைசோர, கலசம் திருமுடியில் விழுந்தது. அவரும் திருவடியிலே விழுந்து சோர்ந்து கிடந்தார். திருவருளினுலே நித்திரை அடைந்தார். சிவபெருமான் அவர் கனவிலே தோன்றினுர். 'பஞ்சம் நீங்கும்வரைக்கும் உனக்குத் தினந்தோறும் இங்கே ஒவ்வொரு காசு வைப்போம்' என்று அருளிச்செய்தார். புகழ்த்துணைநாயனுர் விழித்தெழுந்தார். பீடத்தின்கீழ் ஒரு பொற்காசு இருக்கக்கண்டார். அதனைத் திருவருளாணை எனத் தேர்ந்து எடுத்து வாழ்ந்தார். சிவபெருமான் கனவில் அருளிச்செய்தவாறே அந்நாளிலே போல எந்நாளிலும் ஒவ்வொரு காசு பெற்ருர். பஞ்சம் நீங்கிய பின்னரும் நெடுங்காலம் மெய்யடிமைத் தொழில் செய்து சிவபெருமான் திருவடிநீழலை அடைந்தார். முயன்றவினை பால்வகையால் கருதியபயனைத் தாராதாயினும் முயற்சி தனக்கு இடமாகிய உடம்பு வருந்திய வருத்தத்தின் கூலியளவு தரும் பாழாகாது என்றருளினர் திருவள்ளுவர்.

தெய்வத்தான் ஆயவழித் தன் அளவின் மிக்க பயனைத்தரும் என்பது கருத்து. வற்கடம் - பஞ்சம். மெய் - உடம்பு.

குறள் அதி - 62, ஆள்வினையுடைமை 9.

## கோட்புலிநாயனர்

பொலிகிளைகொன் ருர்கோட் புலியார் விரையாக்
கலிகடந்த குற்றம் கடிந்தார் - உலகில்
குடிபுறங் காத்தோம்பிக் குற்றம் கடிதல்
வடுவன்று வேந்தன் தொழில். (74)

கோட்புலிநாயனர் சோழநாட்டிலே, நாட்டியத் தான் குடியிலே, வேளாளர் குலத்திலே அவதரித்தவர். சிவபத்தியிற் சிறந்தவர். அரசனிடத்திலே சேனுதிபதித் தொழில் பூண்டவர். அவர் அதனுல் கிடைக்கின்ற வேதனத்தைக்கொண்டு சிவாலயங்கட்குத் திருவமுதின் பொருட்டு நெல்லுவாங்கிக் கட்டுதலாகிய திருப்பணியை நெடுங்காலம் செய்துவந்தார்.

ஒருநாள் அரசன் ஏவலினுல் அவர் போர்முனைக்குச் செல்ல நேர்ந்தார். தாம் திரும்பிவரும்வரையில் சுவாமிக்குத் திருவமுதின்பொருட்டு வேண்டும் நெல்லைக் கட்டினுர். அதனை எடுத்துச் செலவழியாதிருக்கும்படி தமது சுற்றத்தார் எல்லாருக்கும் தனித்தனியே ஆணையிட்டார். போருக்குப் போயினுர். சிலநாளிலே பஞ்சம் வந்தடுத்தது. பஞ்சம் நீங்கும்வரை சுவாமிக்குத் திருவமுதின்பொருட்டுக் கட்டிய இந்நெல்லைக் கொண்டாயினும் நாம் பிழைத்துப் பின் கொடுத்துவிடுவோம் எனச் சுற்றத்தார் கருதி அதனை எடுத்துச் செலவழித்தார்கள். கோட்புலிநாயனர் பகைவரை வென்று போர்முனையினின்று திரும்பினுர். தம் ஊரை அடைந்தார். சுற்றத்தார் அதிபாதகம் செய்தமையை உணர்ந்தார். தம் வீட்டினுள்ளே நுழைந்து அனைவரையும் வாளினுலே துணித்தார். எஞ்சிய ஓர் ஆண்குழந்தையைக் கண்டார். இது இந்நெல் உண்டவளுடைய

முலைப்பாலை உண்டது என அதனையும் துணித்தார். சிவபெருமான் திருவருள் பெற்ருர். குடிகளைப் பிறர் நலியாமற் காத்துத் தானும் நலியாது பேணி, அவர் மாட்டுக் குற்றம் நிகழின் அதனை ஒறுப்பான் ஒழித்தல் வேந்தனுக்குப் பழியன்று, தொழிலாகலான் என்ருர் வள்ளுவனர்.

புறம்காத்து - பிறர் துன்பம் செய்யாதவாறு காப்பாற்றி. ஓம்பி - தான் துன்புறுத்தாது. வடு - பழி.

*குறள் அதி - 55, செங்கோன்மை 9.*

## சுந்தரமூர்த்திநாயனர்

*மாவணங்கைக்கொண்டிடுமுன் வந்தரனர் சுந்தரர்க்கோர்*
*ஆவணங் கொண்டுமறித் தாட்கொண்டார் - நோவ*
*அழச்சொல்லி அல்ல நிடித்து வழக்கறிய*
*வல்லார்நட் பாய்ந்து கொளல்.* (75)

வன்ருெண்டராகிய ஆரூரர் தம்மரபிற்குரிய ஒரு மங்கையை மணக்க மணக்கோலங்கொண்டிருந்தார். சம்சாரபந்தமாகிய படுகுழியிலே தமதுதோழர் வீழு முன்பு அடிமையோலை ஒன்று கையிலேந்தி அந்தணர் வடிவத்துடன் சிவபெருமான் மணவறையை அடைந்தார். ஓலையைக் காட்டி அடிமைசெய்ய அவரை அழைத்தார் அந்தணர். ஆரூரர் மறுக்கவே, ஓலையை வாங்கிக் கிழித்தெறிந்தார். மறுபடியும் சபையார் முன்புசென்று மூல ஓலையைக்காட்டி அழைத்தார். அதற்கு இணங்கினுர் சுந்தரர். அருட்டுறை ஆலயத்துக்கு அவரை அழைத்துச்சென்ருர்; மறைந்தருளினுர். சிவபெருமான் வலியவந்து சுந்தரரைத் தடுத்தாட்கொண்டார். தாம் உலக வழக்கல்லது செய்யக்கருதில்

சோகம் பிறக்கும்வகை சொல்லி விலக்கியும், செய்தக்கால் பின்னும் செய்யாவகை நெருக்கியும், அவ்வழக்குச் செய்யாவழிச் செய்விக்கவும் வல்லாரை ஆராய்ந்து நட்புக்கொள்க என்றார் திருக்குறள் ஆசிரியர்.

மா அணங்கு - அழகால் இலக்குமியை ஒத்த பெண். ஆவணம் - உரிமைப்பத்திரம்.

*குறள் அதி - 80, நட்பாராய்தல் 5.*

## பத்தராய்ப்பணிவார்கள்

*வாய்ப்பவர னைத்தொழுது வாய்குழறிக் கண்ணருவி*
*தோய்ப்பநடுங் கிப்புளகித் தோர்பத்த - ராய்ப்பணிவார்*
*அன்பின் வழிய துயிர்நிலை அஃதிலார்க் (கு)*
*என்புதோல் போர்த்த உடம்பு.* (76)

சிவனடியார்களைக் கண்டால் அவர்களுடைய மரபை விசாரியாமல் அவர்களைச் சிவனெனவே பாவித்து வணங்கித் தொண்டுபூண்டு ஒழுகுதல் வேண்டும். மனமகிழ்ந்து மிக்க ஆசையுடன் பசுவுக்குப்பின் கன்று அணைதல்போல அணைதல்வேண்டும். அடியார் உயர்வும் தமது தாழ்வும் கருதிப் பேசும்போது கூசவேண்டும். அவர்கருமம் தங்கருமமாகச் செய்தல் வேண்டும். சிவபெருமானைப் பத்தியுடன் யாரேனும் விதிப்படி அருச்சித்தால் மனம் மகிழ வேண்டும். சிவபெருமானையும் அவருடைய அடியார்களையும் மிக விருப்புடன் சிவாகமவிதிப்படி அருச்சித்தல்வேண்டும். தாம் இயற்றும் புண்ணியங்களைச் சிவபெருமானுடைய திருவடிக்கே கொடுத்தல்வேண்டும். சிவசரிதங்களை மெய்யன்புடனே கேட்டல்

வேண்டும். சிவபெருமானை வணங்கி மனம் நெக்கு நெக்குருக, மெய்சிலிர்ப்ப, கண்களில் ஆனந்த அருவி பொழிய, நாத்தழுதழுப்பப் பரவசமாதல்வேண்டும். நின்றாலும் இருந்தாலும் கிடந்தாலும் நடந்தாலும் உண்டாலும் துயின்றாலும் விழித்தாலும் ஒருபோதும் மறவாதிருத்தல்வேண்டும். சிவவேடம் தரித்துச் சிவனடியார் போல நடித்து அதனால் சீவனம் செய்யலாகாது. இவைகளையுடையோர் பத்தராய்ப்பணிவார் என்று சொல்லப்படுவார்கள். அன்பு முதலாக அதன் வழிநின்ற உடம்பே உயிர்நின்ற உடம்பாவது; அவ்வன்பில்லாதார்க்கு உளவான உடம்புகள் என்பினைத் தோலால் போர்த்தனவாம், உயிர் நின்றன ஆகா என்றார் வள்ளுவனார்.

உயிர்நிலை என்றது உடம்பினை.

*குறள் அதி - 8, அன்புடைமை 10.*

## பரமனையேபாடுவார்

*பரமனையே பாடுவார் பாடும் புகழால்*
*இருவினையும் சேரார் இவரே - மருளாம்*
*இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்*
*பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.* (77)

வடமொழி தென்மொழிகளில் வல்லராய், சனன மரணத்தில் அகப்பட்டுச் சுழலும் பசுக்களாகிய பிரம விட்டுணு முதலிய தேவர்களையும் மனிதர்களையும் மதித்து, அவர்களுக்கு வினைக்கு ஈடாகக் கிடைத்த அநித்தமும் துக்கமும் ஆகிய வாழ்வை மெய்யெனக் கருதி, அவர்களைப் பாடி வாழ்நாளை வீண்நாளாகப்

போக்காமல் பதிப்பொருளாகிய சிவபெருமானுடைய பெருமையை வேத சிவாகம புராணவழியால் உள்ள படி அறிந்து, அவருடைய திருவடிகளை அடைந்து, மனம் கசிந்துருக, மெய்ம்மயிர் பொடிப்ப, ஆனந்த அருவி பொழிய, அவரையே மெய்யன்போடு பாடி "நாம் சுவதந்திரர் ஆகிய சிவபெருமானுக்கே ஆளானேம்; பரதந்திரர் ஆகிய மற்றுள்ளோர்களில் ஒருவருக்கும் குடியல்லோம்; அவர்கள் எல்லாருக்கும் மேலானேம்" என்று இறுமாப்படைந்து திரிகின்ற மெய்யடியார்களே பரமனையே பாடுவார் என்று சொல்லப்படுவார்கள், மயக்கத்தைப்பற்றிவரும் நல்வினை தீவினை என்னும் இரண்டுவினையும் உளவாகா, இறைவனது மெய்ம்மை சேர்ந்தபுகழை விரும்பினுரிடத்து என்று திருக்குறளில் அருளிச்செய்தனர் திருவள்ளுவநாயனுர்,

பொருள் - மெய்ம்மை. புரிதல் - எப்பொழுதும் சொல்லுதல். நல்வினையும் பிறவிக்குக்காரணமாதலின் இருவினையும் என்ருர்.

*குறள் அதி - 1, கடவுள் வாழ்த்து 5.*

சித்தத்தைச்சிவன்பாலேவைத்தார்

*அத்தனடி அல்லால் அறம்பொருளின் பங்களிலே*
*சித்தமலை யார்சித்தத் தைச்சிவன்பால் - வைத்தார்தாம்*
*பற்றுக பற்றற்ருன் பற்றினை அப்பற்றைப்*
*பற்றுக பற்று விடற்கு.* (78)

உச்சுவாசம் நிச்சுவாசம் இரண்டையும் அடக்கி, சுழுமுனைவழியிலே பிராணவாயுவை நிறுத்தி, விடய இச்சைகளில் மனத்தைச்செல்லவொட்டாமல்திருப்பி,

ஒருகுறிப்பிலே நிறுத்தி, மூலாதாரம் சுவாதிட்டானம் மணிபூரகம் அநாகதம் விசுத்தி ஆக்கினை என்னும் ஆறு ஆதாரங்களின் அந்தர்மாதுருகாக் கிரமத்தை அறிந்து, அந்தந்த ஆதார தெய்வங்களைப் பூசித்துத் தியானித்து, ஆறுஆதாரங்களிலும் அசபாசத்தி சிவான் மிகையாய் நிற்கும் முறையை அறிந்து, மூலாதாரம் தொடங்கி விநாயகர் முதலியதேவதைகளைப்பொருந்தி அபிமுகம் பண்ணிக்கொண்டு, மேலாகிய பிரமரந்திரம் வரையில் அசபையுடன் சென்று அணைந்து, அப்பிரம ரந்திரத்திலே கீழ்நோக்கி உள்ள ஆயிரம் இதழ்த் தாமரையைச் சிவார்க்கனாலே அலரச்செய்து, சந்திர மண்டலத்தை இளகப்பண்ணி அந்த அமிர்தத்தை எல்லா நாடிகள்வழியாக நிறைத்து, சுயம்பிரகாசமாய் இருக்கும் பூரணப்பிரகாசத்தைப் பாவித்திருப்பவர் களே சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார் ஆவார். எல்லாப்பொருளையும்பற்றிநின்றே பற்றற்ற இறைவன் ஓதிய வீட்டுநெறியை இதுவே நன்னெறி என்று மனத்துக்கொள்க; கொண்டு, அதன்கண் உபாயத்தை அம்மனத்தாற்செய்க விடாதுவந்த பற்று விடுதற்கு எனக்கூறிவைத்தார் வள்ளுவனார்.

பற்று அற்றான் என்றது இறைவனை.

*குறள் அதி – 35, துறவு 10.*

## திருவாரூர்ப்பிறந்தார்

*மன்னுதிரு வாரூர் மதில்வட்டத் துப்பிறந்தார்*
*உன்னு சிவகணத்தின் உற்றுயர்ந்தார் - இன்னே*
*நிலத்திற் கிடந்தமை கால்காட்டும் காட்டும்*
*குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல்.* (79)

முற்பிறப்பிலே செய்த சிவபுண்ணியத்தினாலே, திருவாரூர் என்னும் சிவதலத்திலே சைவமரபினராய்ப் பிறந்தவர்கள் அந்தணர் அரசர் வணிகர் வேளாளர் என்னும் நான்கு வருணத்தவராயினும், சங்கரசாதியார் ஆயினும், சிவபெருமானுடைய திருவருளை அடைதலால் சிவகணநாதராய் இருப்பவர்கள். திருவாரூர்ப் பிறந்தார்கள் எல்லாரும் சிவகணநாதர்கள் என்று சிவபெருமானே நமிநந்தியடிகளுக்கு அருளிச்செய்தனர். அப்படியே அந்நாயனாரும் அவர்கள் எல்லோரும் சிவகணநாதராய்த் தோன்றக்கண்டார். நிலத்தின் இயல்பை அதன்கண் முளைத்த முளைகாட்டும்; அது போலக் குலத்தின் இயல்பை அதன்கட் பிறந்தார் வாயிற் சொற்காட்டும் என்று திருவள்ளுவநாயனார் கூறியமை காண்க.

கால் - முளை.

குறள் அதி - 96, குடிமை 9.

## முப்போதும்திருமேனிதீண்டுவார்

*கருமேனி அன்பால் கழீஇமுப் போதும்*
*திருமேனி தீண்டுவார் சீர்வாழ் - வொருவா*
*பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க*
*நெறிநின்றார் நீடுவாழ் வார்.* (80)

சிருட்டிகாலத்திலே அநாதிசைவராகிய சதாசிவ மூர்த்தியினுடைய சத்தியோசாதம், வாமதேவம், அகோரம், தற்புருடம், ஈசானம் என்னும் ஐந்து திருமுகங்களினின்றும் தோன்றிய கௌசிகர், காசிபர், பாரத்துவாசர், கௌதமர், அகத்தியர் என்னும் பஞ்சரிஷி கோத்திரத்திலே உற்பவித்த சிவப்பிராமணர்கள்

ஆதிசைவர் என்று சொல்லப்படுவார்கள். அவர்க ளுள்ளே சமயம், விசேடம், நிருவாணம், ஆசாரிய அபிடேகம் முதலிய தீட்சைகளைப் பெற்றவர்களே சர்வாதிகாரிகளாவார். அவர் உத்தமோத்தம சிவா சாரியர்கள் எனச் சிவாகமம் அருளிச்செய்யும். பரார்த் தப் பிரதிட்டை, பரார்த்த பூசைகள் செய்வதற்கு அவர்களே உரியவர்கள். ஏனையோர் உரியர் அல்லர். அதனால் அவர்களே சிவாகமவிற்பன்னர்கள் ஆகிக் கிருத கிருத்தியர்களாய் முப்போதும் சிவலிங்கமூர்த் தியை அருச்சிப்பார்கள்; ஆதலால் அவர்களே முப் போதும் திருமேனி தீண்டுவார் எனச் சொல்லப்படு வார்கள். மெய் வாய் கண் மூக்குச் செவி என்னும் பொறிகளை வழியாகவுடைய ஐந்தவாவினையும் அறுத் தானது மெய்யான ஒழுக்கநெறியின்கண் வழுவாது நின்றார் பிறப்பின்றி எக்காலத்தும் ஒருதன்மையராய் வாழ்வார் என்றார் வள்ளுவநாயனார்.

*குறள் அதி - 1, கடவுள் வாழ்த்து 6.*

## முழுநீறுபூசியமுனிவர்

*அழுதி சனை நினைந்தே அஞ்சுபதம் சொல்லி*
*முழுநீ றணிவார்தாம் முட்டார் - பழுதுறினும்*
*ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே*
*செல்லும்வாய் எல்லாம் செயல்.* (81)

தோன்றும் காரணங்களால் கற்பம் அநுகற்பம் உபகற்பம் என விபூதி மூன்று வகைப்படும். அவை களையேனும், நித்தியாக்கினியில் எடுத்த விபூதியை யேனும் சிவபெருமான் முன்னும், அக்கினி முன்னும், குருமுன்னும், அசுத்தநிலத்தும், வழிநடக்கும்போதும்

பூசாது உத்தூளனம் திரிபுண்டரம் பிறைவடிவம் முக்கோணம் வட்டமாகச் சிவாகம விதிப்படி அன்போடு பூசுகின்றவர்கள் முழுநீறுபூசிய முனிவர் என்று சொல்லப்படுவார்கள். தத்தமக்கு இயலும் திறத்தான் அறமாகிய நல்வினையை ஒழியாதே அஃது எய்துமிடத்தான் எல்லாம்செய்க என்றார் வள்ளுவர்.

முட்டார் - தடைப்படார். ஓவாதே - ஒழியாதே.

*குறள் அதி - 4, அறன்வலியுறுத்தல் 3.*

அப்பாலும்அடிச்சார்ந்தார்

*பாடுமுனைப்பாடியர்கோன் பாடலின்மெய்ப் பாடகம்கொண்*
*டாடுவரப் பாலும் அடிச்சார்ந்தார் - நீடரன்பால்*
*கற்றின்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்*
*மற்றீண்டு வாரா நெறி.* (82)

மூவேந்தர்களாகிய சேர சோழ பாண்டியர்களுக்கு உரிய தமிழ்நாட்டுக்கு அப்புறத்திலே சிவபெருமானுடைய திருவடியை அடைந்தவர்களும், சுந்தரமூர்த்திநாயனாருடைய திருத்தொண்டத்தொகையிலே சொல்லப்பட்ட திருத்தொண்டர்களுடைய காலத்துக்கு முன்னும் பின்னும் சிவபெருமானுடைய திருவடிகளை அடைந்தவர்களும் அப்பாலும் அடிச்சார்ந்தார் என்று சொல்லப்படுவார்கள். இம்மக்கட்பிறப்பின்கண்ணே உபதேசமொழிகளை அநுபவமுடைய தேசிகர்பால் கேட்டு அதனால் மெய்ப்பொருளை உணர்ந்தவர் மீண்டு இப்பிறப்பின்கண் வாராத நெறியை எய்துவர் எனத் திருவள்ளுவநாயனார் அருளிச்செய்தனர்.

முனைப்பாடியர்கோன் என்றது சுந்தரமூர்த்தி சுவாமிகளை. ஈண்டு வாராநெறி - வீட்டுநெறி.

குறள் அதி - 36, மெய்யுணர்தல் 6.

## சுந்தரமூர்த்திநாயனார்

*பித்தரென வைதால் பிழைபொறுத்தல் மாத்திரமோ*
*அத்தர்ஆ ரூரர்க் கருள்புரிந்தார் - நித்தம்*
*அழிவந்த செய்யினும் அன்பறார் அன்பின்*
*வழிவந்த கேண்மை யவர்.* (83)

உயிர்க்குயிராய் நின்று திருவருள் செய்யும் சிவ பெருமான் ஆலால சுந்தரரை ஆட்கொள்ளும்பொருட்டு அந்தணர்கோலங்கொண்டு வந்து அடிமை ஓலையைக் காட்ட, அவர் நீ பித்தனோ? எனச் சினந்தார். சுந்தரர் கூறிய அப்பெரும்பிழையைப் பரமன் பொறுத்ததுமாத்திரமோ? பின்னும் அவரைத் திருவருட்டுறை ஆலயத்துக்குள் அழைத்துச் சென்றார். 'என்றும் நீ நமக்குத்தோழன்; இக்கல்யாணக் கோலத்துடனேயே வாழ்வாய்; நம்மைப்பாடுக' என்று அருளிச்செய்தார். சிவானந்த வாழ்விலே அவரை இருத்தினார். நட்டார் தமக்கு அழிவுவந்தவற்றைச் செய்தாராயினும் அவர் மாட்டு அன்பு ஒழியார், அன்புடனே பழையதாய்வந்த நட்பினையுடையார் என்று திருக்குறளிலே ஆசிரியர் கூறினமை காண்க.

குறள் அதி - 81, பழைமை 7.

## பூசலார்நாயனார்

*வானமுதல் தாபி வரையனத்தே கட்டியரன்*
*தானமரப் பூசலார் தாபித்தார் - ஞானம்*
*மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்*
*நிலமிசை நீடுவாழ் வார்.* (84)

தொண்டைமண்டலத்திலே திருநின்றவூரிலே பூசலார்நாயனுர் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் அந்தணர். சிவனடியார்களுக்கு வேண்டுவனவற்றைக் கொடுத்து அதனுல் மகிழ்வார். சிவபெருமானுக்கு ஒரு ஆலயம் கட்ட விரும்பினுர். எங்கும் வருந்திப் பொருள் தேடத் தொடங்கினுர். சிறிதும் கிடைத்திலது. பெரிதும் நைந்து நொந்தார். பின்பு மனுே பாவனையினுல் ஆலயங் கட்டத் துணிந்தார். மனத்தினுலேயே அதற்கு வேண்டும் பொருள்களையும், உபகரணங்களையும், சிற்பர்களையும் தேடி அமைத்தார். நன்னுளிலே அடிநிலைபாரித்தார். இரவிலும் துயிலின்றி நெடுநாள் முயன்று கோயில் கட்டிமுடித்தார். சிவப்பிரதிட்டை செய்தற்கு உரிய நன்னுளை நோக்கியிருந்தார். இஃது இவ்வாருக, காடவ அரசன் காஞ்சீபுரத்திலே தம் பெரும்பொருளைச் செலவழித்துக் கோயில் கட்டினுன். அதிலே சிவபெருமானைப் பதிட்டை செய்யும் முதல்நாள் அரசனது கனவிலே தோன்றிப் 'பூசலார் கோயிலில் நாளைப்புகுவேம்; உன்கோயிலில் பிரதிட்டையை வேறுநாளில் வைத்துக்கொள்ளுக' என்று அருளினுர். உடன் அரசன் விழித்தெழுந்தான். திருநின்றவூரை அடைந்து விசாரித்தான். பூசலாரை அறிந்து அவரிடம் தானே சென்றுன். கனவு நிகழ்ச்சியை விண்ணப்பித்தான். பூசலார் தாம் தம் மனக்கோயில் கட்டியதை அவ்வரசனுக்கு அறிவித்தார். அரசன் வணங்கி விடைபெற்றுச் சென்றுன். பூசலார் சுபமுகூர்த்தத்திலே சுவாமியைப் பிரதிட்டைசெய்து நெடுங்காலம் பூசித்திருந்தார். மலரின்கண்ணே சென்ற வனதுமாட்சிமைப்பட்ட அடிகளைச் சேர்ந்தார், எல்லா உலகிற்கும் மேலாய வீட்டுலகின்கண் அழிவு

இன்றி வாழ்வார் என்று அருளிச்செய்தார் திருவள்ளுவநாயனுர்.

வானம் - உபானம். தூவி - ஸ்தூபி.

குறள் அதி - 1, கடவுள்வாழ்த்து 3.

மங்கையர்க்கரசியார்

*ஞானசம் பந்தரங்கே நண்ணியபின் எண்ணிலா (து)*
*ஆனிவினைத் தாரே அமணர்க்கு - மானியார்*
*கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்*
*குத்தொக்க சீர்த்த இடத்து.* (85)

மதுராபுரியிலே அரசுபுரிந்த நெடுமாறநாயனுருக்கு மனைவியார் சோழ அரசருடைய திருமகளார் ஆகிய மங்கையர்க்கரசியார். அவர் சமய குரவராகிய திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுரால் திருப்பதிகத்திலே சிறப்பித்துப் பாடப்பட்டவர். பரசமயகோளரியாகிய அப்பரமாசாரியருடைய திருவருளினுலே நெடுங்காலம் தம்முடைய நாயகருக்குச் சைவவழித் துணையாகி, பாண்டி நாடெங்கும் சைவத்திருநெறியைப் பரிபாலனம் செய்துகொண்டிருந்து, தம் நாயகரோடு சிவபதத்தை அடைந்தார். வினைமேற் செல்லாதிருக்கும் காலத்துக் கொக்கு இருக்குமாறு போல இருக்க; மற்றைச் செல்லுங்காலம் வாய்த்தவழி அது செய்து முடிக்குமாறு போலத் தப்பாமற் செய்து முடிக்க என்றருளினர் வள்ளுவநாயனுர்.

"மீன் கோடற்கு இருக்கும்வழி அது வந்து எய்தும் துணையும் முன் அறிந்து தப்பாமற்பொருட்டு உயிர் இல்லது போன்று இருக்கும் ஆகலானும்,

எய்தியவழிப் பின் தப்புவதற்கு முன்பே விரைந்து குத்தும் ஆகலானும், இருப்பிற்கும் செயலிற்கும் கொக்கு உவமை ஆயிற்று'' என்ருர் பரிமேலழகர். "மடைத்தலையில், ஓடுமீன் ஓட உறுமீன் வருமளவும், வாடி இருக்குமாம் கொக்கு'' என ஔவையாரும் அருளினமை காண்க.

ஹானி என்பது ஆனி என வந்தது.

*குறள் அதி - 49, காலமறிதல் 10.*

## நேசநாயனுர்

*ஈசருடை மெய்யடியார்க் கேதேனும் செய்வனென்று*
*நேசருடை கோவணம்கிள் நெய்தளித்தார் - ஆசை*
*அன்றறிவா மென்னு தறஞ்செய்க மற்றது [புரிந்(து)*
*பொன்றுங்கால் பொன்ருத் துணை. (86)*

நேசநாயனுர் என்பவர் காம்பீலி நகரத்திலே சாலியர் குலத்துக்குத் தலைவர். அவர் சிவபெருமானுடைய திருவடிகட்குத் தம்மனத்தை ஒப்புவித்தார். திருவைந்தெழுத்தை விதிப்படி கணித்தற்குத் தமது வாக்கின் செயலை ஆக்கினுர். சிவனடியார்கட்குப் பணிவிடைசெய்யத் தமதுகரத்தை வைத்தார். ஆடையும் கீளும் கோவணமும் நெய்து, தம்பால் வருகிற சிவனடியார்களுக்கு இடையருது அன்பினுல் அவற்றைக் கொடுத்து வணங்கி நாடோறும் துதித்துக் கொண்டு வாழ்ந்து சிவபதத்தை அடைந்தார். யாம் இதுபொழுது இளையம் ஆகலின் இறக்கும் ஞான்று செய்தும் எனக் கருதாது அறத்தினை நாடோறும் செய்க; அவ்வாறு செய்த அறம் இவ்வுடம்பினின்றும்

உயிர்போம்காலத்து அதற்கு அழிவில்லாத துணையாம் எனக் கூறியருளினர் திருவள்ளுவதேவநாயனுர்.

"பிறக்கும் பொழுது கொடுவந்த தில்லை பிறந்து மண்மேல், இறக்கும் பொழுது கொடுபோவ தில்லை... சிவன்தந்ததென்று கொடுக்கறியாது இறக்கும் குலாம ருக்கு என்சொல்லுவேன் கச்சியே கம்பனே" என்று அருளினர் பட்டினத்துப்பிள்ளையார்.

*குறள் அதி - 4, அறன்வலியுறுத்தல் 6.*

## கோச்செங்கட்சோழநாயனுர்

*முந்திகலால் செங்கணுன் மூண்டானைக் காவினும்பின்*
*தந்திபுகா வாயில் சமைத்தானே - எந்தைக் (கு)*
*உடம்பா டிலாதவர் வாழ்க்கை குடங்கருள்*
*பாம்போ டுடனுறைந் தற்று.* (87)

சிவபுண்ணிய முதிர்ச்சியால் முற்பிறப்பு உணர்ச்சி மிக்குச் சிவபெருமானது திருவருளினுலே தோன்றி யவர் கோச்செங்கட்சோழநாயனுர். அவர் சைவத் திரு நெறி உலகிலே தழைக்க அரசியற்றினுர். சிவாலயங் கள் பலவற்றைக் கட்டினுர். திருவானைக்காவிலே தாம் முன்னே அருள்பெற்றதை அறிந்து, அங்கே வெண் ணுவலுடன் சிவபெருமானுக்குத் திருக்கோயில் கட்டு வித்தார். தான் அமைச்சர்களை ஏவிச் சோழநாட்டிலே வெவ்வேறு இடங்களிலே சிவாலயங்கள் பல கட்டு வித்தார். அவ்வாலயங்கள்தோறும் பூசை முதலியவற் றிற்கு நிபந்தங்கள் அமைத்தார். அவர் பின்பு சிதம்பர தலத்தை அடைந்தார். சபாநாயகரைத் தரிசித்து வணங்கினுர். தில்லைவாழந்தணர்களுக்கெல்லாம் திரு

மாளிகைகளைக் கட்டுவித்தார். பல திருத்தொண்டுகள் செய்திருந்து திருச்சிற்றம்பலமுடையார் திருவடி நீழலை அடைந்தார். சிலந்தியாக இருந்தபோது யானையால் நேர்ந்த துன்பத்தை நினைந்து, யானை புகாதபடி வாயிலை அமைத்துக்கோயில் கட்டியவர் இந்நாயனுர். இவர் கட்டிய மாடக்கோயில் எழுபதென்பர். திருநாவுக்கரசுசுவாமிகள் இவர் திருத்தொண்டைப் பல இடங்களில் வைத்துப் பதிகத்தில் அருளினர். மனப்பொருத்தமில்லாதாரோடுகூட ஒருவன் வாழுகின்ற வாழ்க்கை ஒரு குடிலினுள்ளே பாம்போடுகூட உறைந்தாற்போலும் என்றருளினர் முதற்பாவலர்.

"திருவானைக் காவிலோர் சிலந்திக்கு அந்நாள் கோச்சோழர் குலத்தரசு கொடுத்தார் போலும் குடந்தைக் கீழ்க்கோட்டத்தெம் கூத்தனுரே" என்பது திருநாவுக்கரசுசுவாமிகள் தேவாரம்.

இகல் - பகை. தந்தி - யானை. குடங்கர் - குடில்.

*குறள் அதி - 89, உட்பகை 10,*

*சிலம்பியாய் நூற்கோயில் செய்தசெங்க ணுன்பின்*
*தலங்கடொறும் கோயில் சமைத்தார் - நலங்கூர்*
*தவம்செய்வார் தம்கருமம் செய்வார்மற் றல்லார்*
*அவம்செய்வார் ஆசையுட் பட்டு.* (88)

திருவானைக்காவுடைய செல்வர்க்குத் திருமேனியில் சருகு உதிராவண்ணம் வாய்நூலால் மேற்கட்டி செய்து போற்றிய சிவபுண்ணியமுதிர்ச்சியால் சோழர் குலத்து அரசராய்த் தோன்றியது சிலந்திப்பூச்சி ஒன்று. முற்பிறப்பின் உணர்ச்சியுடன் பல சிவாலயங்களைக்

கட்டி முடித்தார் கோச்செங்கட்சோழ நாயனர். எங்கணும் சைவப்பெருநெறி தழைக்க அரசியற்றினர் அவர். இதனைத் திருநாவுக்கரசுசுவாமிகள் தமது தேவாரத் திருப்பதிகத்திலே வைத்துப் போற்றியருளினர். தங்கருமம் செய்வாராவார் துறந்து தவத் செய்வார்; அவரையொழிந்த பொருள் இன்பங்களைச் செய்வார் அவற்றின்கண் ஆசையாகிய வலையுட் பட்டுத் தமக்குக் கேடுசெய்வார் என்றருளினர் பெருநாவலர்.

"புத்தியினுற் சிலந்தியுந்தன் வாயின் நூலால் பொதுப்பந்தர் அதுஇழைத்துச் சருகால் மேய்ந்த சித்தியினல் அரசாண்டு சிறப்புச் செய்யச் சிவகணத் துப் புகப் பெய்தார்'' என்பது அப்பர்சுவாமிகள் (திருப்பாசூர்) திருத்தாண்டகம்.

*குறள் அதி - 27, தவம் 6,*

## திருநீலகண்டயாழ்ப்பாணர்

*கானத் திருநீல கண்டயாழ்ப் பாணரைப்போல்*
*ஞானத் தலைவருக்கு நட்பினரார் - மானத்து*
*மேற்பிறந்தார் ஆயினும் கல்லாதார் கீழ்ப்பிறந்தும்*
*கற்றுர் அனைத்திலர் பாடு.* (89)

திருநீலகண்டயாழ்ப்பாணர் சிவபெருமானுடைய திருப்புகழை யாழிலிட்டுப்பாடும் நியமம் உடையவர். அவர் நடுநாட்டிலே திருவெருக்கத்தம்புலியூரிலே அவதரித்தவர். சோழநாட்டில் உள்ள சிவதலங்களை யெல்லாம் தரிசனம் செய்தார். பாண்டிநாட்டை அடைந்தார். மதுரைச் சொக்கலிங்கமூர்த்தியினுடைய

திருக்கோயிலின் வாயிலைச் சேர்ந்தார். சிவபெருமானுடைய புகழ்களை யாழில் இட்டு வாசித்தார். சொக்கலிங்கமூர்த்தி அன்று இரவு தம்முடைய அடியார்கள் எல்லாருக்கும் கனவிலே தோன்றி அருளிச்செய்த படியே அவர்கள் திருநீலகண்டப்பெரும்பாணரைச் சுவாமிசந்நிதியில் அழைத்துவந்தனர். ஆலவாய் அவிர் சடைக்கடவுளது ஆணை அது எனத்தெளிந்த பாணர் சந்நிதியிலே இருந்து யாழ் வாசித்தார். 'இவருக்குப் பொற்பலகை இடுங்கள்' என எழுந்த அசரீரி வாக்கின்படியே அடியார்கள் இவருக்குப் பொற்பலகை இட்டனர். அதில் ஏறி யாழ் வாசித்தார் பாணர். பின்பு பல தலங்களையும் வணங்கினார். திருவாரூரைச் சேர்ந்தார். திருக்கோயிலின் வாயிலை அடைந்தார்; யாழ் வாசித்தார். சிவபெருமான் வடதிசையிலே ஒரு திருவாயில் வகுத்தார். பெரும்பாணர் அதன்வழியாகப் புகுந்தார். வன்மீகநாதரை வணங்கினார். சீகாழியை அடைந்து திருஞானசம்பந்தப்பிள்ளையாரையும் வழிபட்டார். அவருடன் பிரியாதிருந்து பணியாற்றினார். அவர் திருப்பதிகங்களைத் தமது யாழிலிட்டு வாசிக்கும் பெரும்பேற்றைப் பெற்றார். திருநல்லூர்ப்பெருமணத்திலே அவருடன் சிவசோதியிற்கலந்தார். கல்லாதார் உயர்ந்த சாதிக்கண் பிறந்தாராயினும், தாழ்ந்த சாதிக்கண் பிறந்துவைத்தும் கற்றாரது பெருமை அளவிற்றாய பெருமைஇலர் என்றருளினர் பெருநாவலர்.

ஞானத்தலைவர் என்றது திருஞானசம்பந்தசுவாமிகளை. பாடு - பெருமை. கானம் - இசை. நட்பு - சிநேகம். கற்றார் அனைத்து - கல்வியுடையார் பெருமை போன்ற பெருமை.

*குறள் அதி - 41, கல்லாமை 9;*

## சடையநாயனுர்

*ஆம்பற்றி னுல்சடையர் ஆலால சுந்தரரைத்*
*தாம்பெற்ற பேறே தவப்பேறே - ஓம்பிப்*
*பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த*
*மக்கட்பே றல்ல பிற.* (90)

திருநாவலூரிலே, ஆதிசைவகுலத்திலே, தோன்றியவர் சடையநாயனுர் என்பவர். ஆன்மாக்கள் சைவ சமயமே சற்சமயம் என்று உணர்ந்து அதன்வழி ஒழுகி உய்யும்பொருட்டு ஆலாலசுந்தரர் திருவவதாரம் செய்தற்கு, முன்னைப் பல பிறவிகளில் ஈட்டிய சிவ புண்ணியமே ஓர்உருக் கொண்டாலொத்தவர் அவர். ஒருவன் பெறும் பேறுகளுள் அறியவேண்டுவன அறிதற்குரிய மக்களைப் பெறுதலல்லது பிறபேறுகளை யாம் மதிப்பதில்லை எனக் கூறியருளினர் திருவள்ளுவ நாயனுர்.

*குறள் அதி - 7, புதல்வரைப்பெறுதல் 1.*

## இசைஞானியார்

*உற்றஇசை ஞானிதான் ஓங்குபுகழ்ச் சுந்தரரைப்*
*பெற்றதினும் அன்புமிகப் பெற்ருளே - முற்றறிவால்*
*ஈன்ற பொழுதில் பெரிதுவக்கும் தன்மகனைச்*
*சான்ருேன் எனக்கேட்ட தாய்.* (91)

சடையநாயனுருடைய மனைவியார் இசைஞானியார் என்பவர். தம்பிரான் தோழராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகளை வயிறுவாய்த்துப் பெறுதற்குரிய பெரும் பேற்றை அடைதலால் மிக்க புகழைப் பெற்றவர். சுந்தரர் சிவபெருமான் திருவருளைப் பெற்று உலகம்

எல்லாம் சைவசமயத்தைப் பரப்பும் நிலைகளையும். பற்பல அற்புதச் செயல்களையும் கேட்டுப் பெரிதும் மகிழ்ந்திருந்தார். தான் பெற்றபொழுதை மகிழ்ச்சியினும் மிகமகிழும் தன்மகனைக் கல்வி கேள்விகளால் நிறைந்தான் என்று அறிவுடையோர் சொல்லக்கேட்ட தாய் எனத்திருவள்ளுவரும் கூறினமை காண்க.

*குறள் அதி - 7, புதல்வரைப்பெறுதல் 9.*

## சுந்தரமூர்த்திநாயனூர்

*கனிந்திதையம் கண்டார் கமலினியும் காவில்*
*அனிந்திதையும்சுந்தரர்கண்டாங்கே-புனைந்துரைத்தென்*
*கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்*
*என்ன பயனும் இல.* (92)

திருக்கயிலாய மலையிலே சிவபெருமானுடைய அடியார்கூட்டத்துள் ஒருவர் ஆலாலசுந்தரர். ஒருநாள் அவர் பூக்களைக்கொய்து சிவபெருமானுக்குச் சாத்த நினைந்து திருநந்தனவனத்துக்குப்போனார். உமாதேவியாருக்குச் சாத்தும் பொருட்டு மலர்களைக் கொய்ய அவருடைய சிறந்த சேடிகளாகிய அனிந்திதை, கமலினி என்னும் பெயரினையுடைய பெண்கள் இருவரும் அங்கே வந்திருந்தனர். அவ்விருவரையும் ஆலாலசுந்தரர் கண்டார். அவர்மேல் ஆசைகொண்டார். அவர்களும் இவரைக் கண்டு ஆசைகொண்டனர். ஒருவாறு அவர்கள் மனத்தைத் திருப்பி. பூக்களைக் கொய்துகொண்டு திரும்பிவிட்டனர். இச்செயலைச் சிவபெருமான் திருவுளங்கொண்டருளினர், "நீ பெண்கள்மேல் இச்சையைக்கொண்டமையால் தென்னாட்டிலே மானுடதேகம் எடுத்துப் பிறந்து

அப்பெண்களை மணந்து இன்டம் நுகர்வாய்'' எனக் கட்டளையிட்டருளினர். காமத்திற்குரிய இருவருள் ஒருவர் கண்களோடு ஒருவர் கண்கள் நோக்கால் ஒக்குமாயின், அவர் வாய்மை தோன்றச் சொல்லு கின்ற வாய்ச்சொற்கள் ஒருபயனும் உடைய அல்ல என வள்ளுவர் கூறியவாய்மையான் அறிக.

கா - நந்தனவனம்.

*குறள் அதி - 110, குறிப்பறிதல் 10.*

*சுந்தரரைக்கண்டலர்கொய்தோகையர்சென்றாரொருநாள்*
*எந்தைகயிலைக்கிறையால் இன்றளவும் - வந்ததே*
*கண்டது மன்னும் ஒருநாள் அலர்மன்னும்*
*திங்களைப் பாம்புகொண் டற்று.* (93)

சிவபெருமான் திருவடிகளுக்குச்சாத்த மலர் கொய்யும்படி ஆலாலசுந்தரர் கயிலையில் திருநந்தன வனத்துக்குச் சென்றார். அங்கே முன்னமே சென்று உமாதேவியாருக்காக மலர் கொய்துகொண்டிருந்த கமலினி அநிந்திதை ஆகிய இருவரும் அவரைக்கண்டு ஆசைகொண்டனர். சுந்தரரும் அவ்விருவர்பாலும் மனம் பதித்தார். இது ஒரு நாள் கயிலையில் நடை பெற்ற செய்தி, அச்செய்தி இன்றளவும் உலகமுழு வதும் பரவுவதாயிற்று. ஏனெனில், அவர்கள் மண் ணுலகத்திலே பிறக்கின்ற நிலையை அச்செயல் உண் டாக்கியது, யான் காதலரைக் கண்ணுறப்பெற்றது ஒரு ஞான்றே, அதனினும் அலர் அவ்வளவிற்றன்றித் திங்களைப் பாம்புகொண்ட அலர்போன்று உலகெங் கும் பரந்தது எனத் திருவள்ளுவநாயனார் காமத்துப் பால் அலரறிவுறுத்தலில் அறிவுறுத்தினமை காண்க.

திங்கள் - சந்திரன். கண்டு சென்ருர் என்க.

*குறள் அதி - 115, அலரறிவுறுத்தல் 6.*

*அங்கருளால் ஆரூரர் ஆசையற வேபரவை*
*சங்கிலியார் மால்நோய் தவிர்ப்பித்தான் - எங்கோன்*
*பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை*
*தன்நோய்க்குத் தானே மருந்து.* (94)

ஆலால சுந்தரர்பால் திருவருள் மிக்க சிவபெருமான், கயிலையில் திருநந்தனவனத்திலே நிகழ்ந்த காமச் செய்தியை நோக்கிப் பூமியில் சென்று பிறந்து அவரை மணந்து இன்புறுக எனத் திருவாய்மலர்ந்தருளினர். எல்லா ஆன்மாக்களிடத்திலும் வியாபித்திருந்து, அந்த அந்த ஆன்மாக்கள் மனம் வாக்குக் காயங்களினுலே செய்யும் கன்மங்களை அறிந்து, அந்த அந்தக் கன்மங்களுக்கு ஏற்ற பயன்களை ஊட்டி, அக்கன்மங்களைத் தொலைப்பிக்கின்ற அருளுடையவர் ஆகலின், ஆலால சுந்தரர் சுந்தரமூர்த்தியாகவும், கமலினியார் திருவாரூரிலே பரவையாராகவும், அனிந்திதையார் ஞாயிறு கிழாருடைய புத்திரியாகிய சங்கிலியாராகவும் நிலவுலகிலே பிறக்கும்படி நியமித்தார். திருவருளால் அவரை மணந்து ஆலாலசுந்தரர் ஆசை தீர்ந்தார். வாதம் முதலிய பிணிகட்கு மருந்தாவன அவற்றிற்கு நிதானம் ஆயின அன்றி மாருய இயல்பினை உடையனவாம்; அவ்வாறன்றி இவ் அணியிழையினையுடையாள் தன்னின் ஆய பிணிக்கு மருந்தும் தானே ஆயினுள் என்ருர் வள்ளுவனுர்.

*குறள் அதி - 111, புணர்ச்சிமகிழ்தல் 2.*

சீரூர் கயிலையினும் செல்லும்நாள் வில்லவனை
ஆரூரர் சிந்தித் தழைத்திட்டார் - ஏரார்
முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்
தகநக நட்பது நட்பு. (95)

சிவபெருமான் திருவருளாணையின்படி சுந்தரமூர்த்திநாயனுர் திருவஞ்சைக்களத்திலிருந்து வெள்ளை யானையின்மேல் ஏறிக் கயிலைக்குச் செல்வாராயினுர். சுந்தரமூர்த்திநாயனுர் தமது தோழராகிய சேரமான் பெருமாள்நாயனுரைத் திருவுள்ளத்திலே நினைத்துக் கொண்டே வழிச்சென்ருர். அதனை அறிந்த சேரமான் பெருமாள்நாயனுரும் ஒரு குதிரையின் மேலேறித் திருவஞ்சைக்களத்துக்குச் சென்று ஆகாயத்தில்செல்லும் சுந்தரமூர்த்தி நாயனுரைக் கண்டார். குதிரையின் காதிலே திருவைந்தெழுத்தை ஓதினுர். அக்குதிரை வெள்ளையானையை வலமாகவந்து அதற்கு முன்னுகச் சென்றது. கயிலையில் திருவணுக்கன் திருவாயிலை அடைந்த சுந்தரர் சேரமான்பெருமாளும் வந்திருப்பதைச் சிவபெருமானுக்கு விண்ணப்பித்து உள்ளே அழைத்தருளினர். கண்டவழி அகமொழிய முகம் மாத்திரமே மலரும்வகை நட்குமது நட்பாகாது; அன்பால் அகமும் மலர நட்குமதே நட்பாவது என்று அருளினுர் திருவள்ளுவர்.

குறள் அதி - 79, நட்பு 6.

தள்ளாது சேரரொடு தாம்கயிலைக் காரூரர்
வெள்ளானை மேற்சென்ருர் விண்ணுருய் - உள்ளமிசை
வேண்டிய வேண்டியாங் கெய்தலால் செய்தவம்
ஈண்டு முயலப் படும். (96)

தம்பிரான் தோழராகிய சுந்தரமூர்த்திநாயனார் தம் தோழராகிய சேரமான்பெருமாளையும் உடன் நினைந்து அழைத்துக்கொண்டு திருக்கயிலாயமலைக்குச் சென்றார். ஆகாய வீதியில் அயிராவணம் என்னும் இரண்டாயிரம் தந்தங்களையுடைய வெள்ளையானையின்மேல் சுந்தரரும், குதிரையின்மேல் சேரமானும் சென்றனர். சேரமானின் குதிரை முன்னே சென்றது. இவற்றிற்கெல்லாம் தவமே காரணமாம். முயன்றால் மறுமைக்கண் தாம் வேண்டிய பயன்கள் வேண்டியவாறே பெறலாம்; ஆதலால், செய்யப்படுவதாகிய தவம் இம்மைக்கண் அறிவுடையோரால் முயலப்படும் என்றார் திருவள்ளுவநாயனார்.

*குறள் அதி - 27, தவம் 5.*

*நாவலர்வெள் ளானை நடாத்தஉப மன்னியர்போல்*
*ஆவலுடன் சென்றுபணிந் தார்களோ - தேவர்*
*பணியுமாம் என்றும் பெருமை சிறுமை*
*அணியுமாம் தன்னை வியந்து.* (97)

திருக்கயிலாயமலையின் அடிவாரத்திலே உபமன்னியு மகாமுனிவர் அளவிறந்த முனிவர் கூட்டம் சூழ எழுந்தருளியிருந்தார். அப்போது அவ்விடத்திலே ஒரு பேரொளி ஆயிரம் சூரியர் ஒருங்கே உதயம் செய்தாற்போலத் தோன்றிற்று. முனிவர்கள் வியந்து என்ன என்று வினவினர். உபமன்னியு திருவருளைச் சிந்தித்து, திருக்கயிலாயத்தினின்று தென்னாட்டிலே அவதரித்த சுந்தரமூர்த்திநாயனார் எழுந்தருளி வருகின்றார் என உணர்ந்தார், விரைந்தெழுந்தார்; இரண்டு கைகளையும் சிரசின்மேல் கூப்பி வணங்கினார்; அந்தத் திக்கை

நோக்கி நடந்தார். முனிகணங்களை நோக்கி, சிவபெருமானது ஆஞ்ஞையால் தென்னுட்டிலிருந்து சுந்தரர் தேவர்கள்சூழ வெள்ளையானை மேற்கொண்டு திருக்கைலாசத்துக்கு எழுந்தருளி வருகின்றார்; அவர் எம்மாலும் எவராலும் வணங்கப்படும் பெருந்தகைமையுடையவர் என்று சொல்லியருளினர். உபமன்னியு மகாமுனிவரைப்போல இந்தப் பெரும்பாக்கியத்தை எந்தத்தேவரும் அடைந்திலர். பெருமையுடையார் அச்சிறப்பு உண்டாயஞான்றும் தருக்கின்றி அமைந் தொழுகுவர்; மற்றைச் சிறுமையுடையார் அஃது இல்லாத ஞான்றும் தம்மை வியந்து புனையாநிற்பர் என்றருளிச்செய்தார் திருவள்ளுவர்.

நாவலர் என்றது சுந்தரமூர்த்திசுவாமிகளை.

*குறள் அதி - 98, பெருமை 8.*

*பாலாழி யுண்ட பழமுனிசொன் ஞன்முனிவர்க்(கு)*
*ஆலால சுந்தரன்சொல் அங்கினிதாய் - மேலாம்*
*பணிவுடையன் இன்சொலன் ஆதல் ஒருவற்(கு)*
*அணியல்ல மற்றுப் பிற.* (98)

வியாக்கிரபாத மகாமுனிவருடைய திருக்குமாரர் உபமன்னியுமகாமுனிவர். சிதம்பரத்திலே சிவபெருமானுல் வருவித்தருளப்பட்ட திருப்பாற்கடலை உண்ட மெய்யடியார். அவர். கண்ணபிரானைச் சிவதீட்சை செய்து தடுத்தாட்கொண்டருளிய சைவாசாரியர். அம்முனிவர்பிரான் திருக்கயிலாயமலை அடிவாரத்தில் முனிவர்குழாத்துடன் விளங்கியிருந்தார். முனிவர்கள் கூட்டத்துக்கு அவர் ஆலாலசுந்தரர் வரலாற்றைச் சிறப்பாகக் கூறியருளினர். சிவாஞ்ஞையினுலே

பூமியிலேசென்று திருவவதாரம்செய்து ஆன்மாக்கள் எல்லாம் உய்யும்படி தமிழ்வேதமாகிய தேவாரத்தை அருளிச்செய்து, இப்பொழுது தேவர்கள்சூழ வெள்ளை யானை மேற்கொண்டு திருக்கயிலாயத்துக்கு எழுந்தருளி வருகின்றார் என்றார். ஒருவனுக்கு அணியாவது தன்னால் தாழப்படுவார்கண் தாழ்ச்சியுடையனாய் எல்லார்கண்ணும் இனியசொல்லையும் உடையனாதல்; இவை இரண்டுமன்றி மெய்க்கணியும் பிற அணிகள் அணியாகா என்றருளினர் பெருநாவலர்.

பழமுனி - உபமன்னியு முனிவர். சொல் - புகழ்.

*குறள் அதி - 10, இனியவைகூறல் 5.*

*தம்முடைய தோழர்வரத் தம்முடைய தோழரையும்*
*வம்மினென வண்கயிலை வாழ்வித்தார் - எம்மிறைவர்*
*நட்பிற்கு விற்றிருக்கை யாதெனில் கொட்பின்றி*
*ஒல்லும்வாய் ஊன்றும் நிலை.* (99)

அருட்பெருங்கடலாகிய சிவபெருமான் தம்முடைய தோழராகிய ஆலாலசுந்தரரைக் கயிலைக்கு வர அழைத்தார். சுந்தரமூர்த்திநாயனாரும் தம்முடைய தோழராகிய சேரமான்பெருமாள் நாயனாரைச் சிந்தித்துக்கொண்டே வழிச்சென்றார். அதனை அறிந்த சேரமான்பெருமாளும் விரைந்து உடன் எதிரே சென்று வணங்கியபடியே கயிலையை அடைந்தார். இருவருக்கும் சிவபெருமான் தரிசனம் தந்தருளினர். சுந்தரமூர்த்தி நாயனார் ஆலாலசுந்தரராகி முன்னே தாம் செய்த திருத்தொண்டைச் செய்வாராயினார். சேரமான்பெருமாள் நாயனார் கணநாதராகி அவர் செய்யும் தொழிலைச் செய்பவராயினார். நட்பினுக்கு

அரசிருக்கை யாதெனில், அஃது எஞ்ஞான்றும் திரிபின்றி இயலும் எல்லையெல்லாம் அறம்பொருள்களில் தளராமைத்தாங்கும் திண்மை என்று திருவள்ளுவ நாயனுர் அருளிச்செய்தார்.

*குறள் அதி - 79, நட்பு - 9.*

**சொல்வைத்த சேரனுலாச் சொல்லக் கயிலையரன்**
**செல்வத் திருச்செவியில் சேர்ந்ததே - மல்வைத்த**
**செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்**
**செல்வத்துள் எல்லாம் தலை.** (100)

சைவசமய நெறியானது உலகமெல்லாம் தழைத்தோங்குமாறு திருவருளாணையால் சேரநாட்டை ஆண்டு புகழ்பெற்ற சேரமான்பெருமாள் நாயனுர் பத்திமேலீட்டால் திருவருளே துணையாகக்கொண்டு சிவபெருமான்மீதுபாடிய திருக்கயிலாய ஞானவுலாவைத் திருச்செவிசாத்தியருள, சிவபெருமான்அதற்கு அருள் செய்தார். அவர் அருளிச்செய்த ஞானவுலாவை அன்றுகேட்ட மாசாத்தரானவர் அதனைத்தரித்துத் தமிழ்நாட்டிலே உள்ள திருப்பிடவூரிலே வெளிப்படச்சொல்லி, பூமியிலே விளங்கும் பொருட்டு நாட்டியருளினுர், ஒருவற்குச் சிறப்புடைய செல்வமாவது செவியான் வரும் செல்வம்; அச்செல்வம் பிறசெல்வங்கள் எல்லாவற்றினும் தலையாகலான் என்று அருளிச்செய்தனர் தெய்வப் புலவராகிய திருவள்ளுவனுர்.

*குறள் அதி - 43, கேள்வி - 1,*

*திருத்தொண்டர்மாலை முற்றிற்று.*